# கல்கி

KALKI 1.9.96
ரூ.3.00

"என்னைப் பற்றி எத்தனை பொய்கள்?"



— மு.க. அழகிரி

ஒரு பெண் ஓவியரின் ஓவியப் பெண்கள்!

உஷார்!
இது மிரட்டும் சிறுகதை ஸ்பெஷல்!



வனத்துறை அமைச்சருடன் ஓர் அதிரடி விசிட்!

— மனம் திறந்து பேசுகிறார் மு.க. அழகிரி

# "என்னைப் பற்றி எத்தனை பொய்கள்?"

தி.மு.க. ஆட்சிக்கு வந்ததிலிருந்து அடிக்கடி பத்திரிகைகளில் அடிபடுகிற பெயர் மு.க. அழகிரி. தமிழக முதல்வர் கருணாநிதியின் மூத்த மகனான இவர் மீது அரசுத் துறைகளில் அத்துமீறி நுழைகிறார் என்கிற குற்றச் சாட்டுக்கள் வந்து கொண்டிருந்த நேரத்தில் மதுரையில் உள்ள அவரது வீட்டில் சந்தித்தோம்.

வீட்டைச் சுற்றிலும் 'அஞ்சா நெஞ்சன்' என்கிற அடைமொழியுடன் கூடிய போஸ்டர்கள், கரை வேட்டியுடன் காத்திருக்கும் கட்சிக்காரர்கள். இவற்றிற்கிடையில் யாருடைய குறுக்கீடுகளும் இல்லாமல் 'ரிலாக்ஸ்டான' நிலையில் நம்மிடம் பேசினார் அழகிரி.



"முழுக்க அரசியல் ஈடுபாடுள்ள குடும்பச் சூழ்நிலையில், ஆரம்பத்திலிருந்து உங்கள் அரசியல் ஈடுபாடு எப்படி?"

"ஆரம்பத்திலிருந்தே பதவியில் இல்லையே ஒழிய, அரசியல்லே இருந்துக்கிட்டுத்தான் இருக்கேன். அண்ணா காலத்திலிருந்தே நான் தி.மு.கவில் உறுப்பினர். எமர்ஜென்சிக் காலத்தில் கலைஞருடன் சேர்ந்து நானும் கைதாகியிருக்கேன். திருச்செந்தூருக்கு கலைஞர் நீதி கேட்டுப் பாத யாத்திரை போனப்போ நானும் போயிருக்கேன். ஆனால் எந்தப் பதவியிலும் இருந்ததில்லை.

"ஸ்டாலின், ஆரம்பத்தில் கோபாலபுரத்திலேயே இளைஞர் அணின்னு வைத்துப் படிப் படியா முன்னேறி, இளைஞர் அணித் தலைவர், எம்.எல்.ஏன்னு வந்திருக்கிறார். என் நிலைமை அப்படியில்லை. பட்டும் படாமலும்தான் அரசியல்லே இருந்திருக்கேன்."

"நீங்கள் அந்த மாதிரி அரசியல்லே வர முயற்சிக்கலையா?"

"இல்லை. எனக்கு அது பிடிக்கலை... இன்றைக்கு அரசியலில் சிலரைத் திட்ட வேண்டியதாயிருக்கு. நாளைக்கு ஏத்துக்க வேண்டியிருக்கு. இது எனக்குப் பிடிக்கலை. என்னுடைய இயல்புக்கு நேரடி அரசியல் ஒத்து வரலை. இருந்தாலும் கட்சிக்காரர்களுடைய நல்லது கெட்டதுக்கெல்லாம் போய்ட்டு வருவேன். அவர்களை உற்சாகப்படுத்துவேன்..' அதோடு சரி."

"கலைஞரே உங்களை அரசியலுக்குக் கொண்டு வர எதுவும் முயற்சித்தாரா?"

"யாரையும் கலைஞர் அரசியலுக்குக் கொண்டு வர முயற்சித்ததில்லை. எல்லாம் தானாக வர்றதுதான். எங்க குடும்பத்திலே ஸ்டாலின் வந்தார்னா அது அவராகவே வந்ததுதான். யாரும் தூண்டி அவர் வரலை. அரசியலில் கலைஞர் இருக்கார். அத்தான் முரசொலி மாறன் இருக்கார். இருந்தும் அரசியல்ல எங்க யாரையும் அவங்க திணிக்கவில்லை. வீட்டையும் பார்க்க வேண்டியதாயிருக்கே? தலைவர் கலைஞருக்கு உதவியா இருந்துட்டு, அப்படியே இருந்துட்டேன். 80-ல் முரசொலியின் மதுரைப் பதிப்பு கொண்டு வந்தப்போ, அதன் நிர்வாகியா மதுரைக்கு வந்தேன். அது சரியாகப் போகாததால் மூட வேண்டிய நிலை. பிறகு வீடியோ கடை வைத்து நடத்தினேன். பிறகு மதுரை பழகிப் போச்சு. அப்படியே பதினாறு வருஷங்களாக இங்கேயே இருந்துட்டேன்."

"திரும்பவும் சமீபத்தில் முரசொலி மதுரைப் பதிப்பைக் கொண்டு வர முயற்சி நடந்ததே?"

"முரசொலியை நடத்த முடியாமல் போனதற்குக் காரணம் கட்சிக்காரர்களின் ஒத்துழைப்பில்லாததுதான். முக்கியமாகத் தலைமைப் பொறுப்பில் இருப்பவர்களே அதை ரெகுலராகப் படிப்பதில்லை. அதனால் மூட வேண்டியதாகிவிட்டது."

"89-ல் தி.மு.க ஆட்சிக்கு வந்தபோதும், இப்போதும் உங்கள் பெயர் அடிக்கடி பிரச்னைக்குரியதாகப் பத்திரிகைகளில் அடிபட என்ன காரணம்?"

"அரசாங்கத்தோட பெயரை எப்படியாவது கெடுக்கணும்கிற எண்ணம்தானே ஒழிய, வேறென்ன? பல அதிகாரிகள் விஷயத்தில் நான் தலையிடுவதாக இஷ்டத்திற்கு எழுதுகிறார்கள். இப்போ, ஒரு கல்லூரியில் சிலருக்கு சீட் கொடுக்கலைன்னு ஒரு முதல்வரை மாத்திட்டதாக எழுதினாங்க. அந்தக் கல்லூரியில் நான் எந்த முயற்சியும் பண்ணலை. அவர் மாற்றப்பட்டது பிரமோஷனில். காவல் துறையில் தலையிடுகிறேனா என்பதை இங்குள்ள காவல் துறை கமிஷனர் போன்றவர்களிடம் கேட்டாலே தெரியும். இதுவரை சட்டத்திற்கு விரோதமாக எந்தவிதத்திலும் நான் செயல்பட்டதில்லை. கட்சிக்காரர்கள் தப்புப் பண்ணினாக் கூட கண்டித்திருக்கிறேன். என்னைப் பற்றி எழுதுகிற சில பத்திரிகைகளுக்கு மறுப்பு எழுதி அனுப்பியிருக்கிறேன். அவர்கள் போடுவதில்லை. வாரப் பத்திரிகைகளில், நான் 20 கோடி ரூபாய் சம்பாதித்ததாகவும், ஆசிரியர்களை மாற்றியதில் 12 லட்சம் ரூபாய் சம்பாதித்ததாகவும் எழுதுகிறார்கள். அரசியலில் நேரடியாகச் சம்பந்தப்படாமல், எந்தப் பதவியிலும் இல்லாமல் ஒதுங்கியிருக்கும் என்னைப் பற்றி எவ்வளவு பொய்கள்?

"தி.மு.கவைப் பற்றி ஏதாவது எழுதியாகணும். அதற்காக, பத்திரிகை விற்க வேண்டுமென்பதற்காக, என்னைச் சம்பந்தப்படுத்தி எழுதுகிறார்கள். குறைந்தபட்சம் இந்தத் தகவல் உண்மைதானா என்பதைக் கூட அவர்கள் உறுதிப்படுத்திக் கொள்வதில்லை."

"அ.தி.மு.க. எம்.பியான ராஜன் செல்லப்பா போன்றவர்கள் உங்களைச் சந்தித்ததாக தகவல் வந்ததே?"

"மதுரை வந்து 16 வருடங்களில், ராஜன்

---

"தலைவர் கட்சியில் களை எடுக்கப் போறாராம்!"

— பிரசன்ன குமார்



செல்லப்பாவை இதுவரை ஒரேயொரு தடவை தான் சந்தித்துப் பேசியிருக்கிறேன். அதுவும் சமீபத்தில் ஃப்ளைட்டில் பார்த்தபோது 'டெல்லி போறீங்களா?''ன்னு கேட்டேன். அதோடு சரி. வேறு எந்த சந்தர்ப்பத்திலும் பார்த்ததில்லை. அவர் எனக்கு ஏதோ தங்கக் கடிகாரம் கொடுத்தார் என்றெல்லாம் சம்பந்தமே இல்லாமல் பத்திரிகைகளில் எழுதுகிறார்கள். ஏன்? ராஜன் செல்லப்பாவிடமே கேட்டுப் பார்க்கலாமே!''

"சென்ற ஐந்து வருட அ.தி.மு.க. ஆட்சியில் கலைஞரது மகன் என்கிற முறையில் உங்களுக்கு அப்போதைய ஆளும் கட்சித் தரப்பிலிருந்து பிரச்னை ஏதாவது வந்திருக்கிறதா?''

"அப்படி எதுவும் இல்லை. சிலசமயங்களில் போராட்ட நேரத்தில் மற்றவர்களோடு சேர்த்து என்னையும் கைது பண்ணியிருக்கிறார்கள். அதெல்லாம் வழக்கமான ஒன்றுதானே! நான் ஏதாவது 'அட்ராஸிட்டியா' முன்பு நடந்திருந்தா அவங்க ஆளும் கட்சியா வந்ததும் என் மேலே கடுமையா நடந்திருப்பாங்க. அப்படி எதுவும் நடக்கலை."

"வை. கோபால்சாமி கட்சியை விட்டுப் பிரிந்த நேரத்தில் உங்களுடைய செயல்பாடு அதிகரித்ததா?''

"அதன் பிறகுதான் கட்சியைக் காப்பாற்ற வேண்டும் என்கிற நோக்கத்தில் ஒரு ஈடுபாடு அதிகரித்தது. அப்போது தென் தமிழகத்தின் பல பகுதிகளுக்கும் நேரடியாகப் போய் என்னால என்ன செய்ய முடியுமோ அதைச் செஞ்சேன். இப்பவும் பல பேர் ம.தி.மு.கவிலிருந்து விலகி தி.மு.கவில் சேர்ந்து கொண்டிருக்கிறார்கள்."

"சமீபத்திய தேர்தலில் கூட உங்களது பெயரை எம்.பி; எம்.எல்.ஏ., பதவிகளுக்கு முன்மொழிந்து, சிலர் கட்சியில் பணம் கட்டினார்களே?''

"நமக்கு அது தேவையில்லை. ஆரம்பத்திலிருந்தே பதவிக்கு வர்றதில் எனக்கு விருப்பமில்லை. அதற்குப் பதில் இன்னொருவருக்கு வாய்ப்புக் கொடுக்கலாம். பதவியில் இல்லாமலேயே எவ்வளவோ நல்ல காரியங்கள் செய்ய முடியுதே."

"கலைஞர் மாதிரி மு.க. ஸ்டாலின் பேச்சுத் திறமையை வளர்த்துக் கொண்ட மாதிரியெல்லாம் நீங்கள் முயற்சிக்கவில்லையா?''

"ஆரம்பத்திலிருந்து அந்த மாதிரி திறமைகளை வளர்த்துக் கொள்ளவில்லை. மீட்டிங்குகளில் பேசுவது, நிறையப் படிக்கிறது இதிலெல்லாம் ஒரு ஈடுபாடு இல்லாததனால் திறமை குறைந்து போச்சு. ஸ்டாலின் படிப்படியா தன்னை வளர்த்துக்கிட்டார். கூச்சப்படாமல் பேசுறார். நமக்கு அப்படியில்லை. நான் அடிக்கடி கூட்டங்களுக்குப் போறதில்லை. போனால் கல்யாணம், காதணி விழாக்கள்தான். அங்கே போனாலும் பத்து நிமிஷம் 'சிம்பிளாய்'ப் பேசுவேன். தொண்டர்களை ஊக்கப்படுத்துவேன்."



''டாக்டர் அடிக்கடி பகல் கனவு வருது.''
''கனவுல என்ன வருது?''
''தமிழ்நாட்டுக்குக் காவிரித் தண்ணீர் வர்ற மாதிரி டாக்டர்!''
— கமல் பா. ஜெயக்குமார்

"கலைஞர் மகன் என்பதால்அதே பாணியிலான பேச்சை உங்களிடமிருந்து எதிர்பார்க்க மாட்டார்களா?''

"அதெல்லாம் எதிர்பார்க்கமாட்டாங்க. நான் பேசிக்கிட்டிருக்கப்பவே பாதிப்பேர் சாப்பாட்டுக்கு எந்திருச்சுப் போயிருவாங்க. கலைஞர், பேராசிரியர் போன்ற மூத்த தலைவர்கன்னா நிப்பாங்க. நாம பேசுறம்னா போயிருவாங்க."

மு.க. ஸ்டாலின் பற்றி பேசும்போது பேச்சில் தனி அக்கறை.

"ஸ்டாலினுக்கும் எனக்கும் இரண்டு வயசு வித்தியாசம். அவருக்கு என்னைவிட அனுபவங்கள் அதிகம். இளைஞரணியில் இந்தப் பகுதியில் யாரையும் நியமிக்கும் போதோ, டூர் ப்ரோக்ராம்போதோ என்னைக் கலந்தாலோசிப்பார். மதுரை புறநகர்ப் பகுதிகளுக்கு வந்தார்னா மட்டும் கூடப் போவேன்'' - சாந்தமான குரலில் சொல்கிறார்.

மதுரைச் சூழல் பற்றிக் கேட்டதும் குஷியுடன் "மதுரைச் சூழ்நிலை எனக்கு பிடிச்சுப் போச்சு. சென்னையை விட மதுரையில் இருப்பதையே விரும்புறேன். இங்கேயே 'பைனான்ஸ்' இருக்கு. சென்னையை விட இங்கே நண்பர்கள் அதிகம் இருக்காங்க. அப்படியே இருந்தாச்சு'' என்று சொல்கிற அழகிரிக்கு பள்ளிக் காலத்தில் ஸ்போர்ட்ஸில் அதிகமான ஈடுபாடு. கிரிக்கெட், பாட்மிண்டன், பில்லியர்ட்ஸில் ஆர்வம்.

"சின்ன வயசில் இருந்தே 'ஸ்போர்ட்ஸில்' இன்ட்ரெஸ்ட். நேரடியாவும் பார்ப்பேன். டெலிவிஷனிலேயும் பார்ப்பேன். கலைஞர் கிரிக்கெட் சம்பந்தமான விஷயங்கன்னா எங்கிட்டதான் 'டிஸ்கஸ்' பண்ணுவார். இப்பப் பாருங்க, உடம்பு 'எக்ஸர்ஸைஸு'க்காக காலையில் தினமும் 'பாட்மிண்டன்' விளையாடிக்கிட்டிருக்கேன்'' என்று பேசும் நாற்பத்தைந்து வயது அழகிரி, கலப்புத் திருமணம் செய்திருப்பவர்.

— அகிலா நியூஸ்

# எட்டிப் பார்க்கும் நம்பிக்கைப் பூ!

சென்னை சேப்பாக்கம் கிரிக்கெட் மைதானத்தின் வெளியே முட்டி மோதிய இளமைப் பட்டாளம், 'கேட்'டுக்கு அந்தப் பக்கம் அவ்வப்போது தலைகாட்டும் கிரிக்கெட் நட்சத்திரங்களைப் பார்த்துப் பரவசப்பட்டுக் கொண்டிருந்தது.

சிங்கர் கோப்பையைத் தட்டிவர சீரியஸ் நெட் ப்ராக்டிஸ், உள்ளே.

வெயில் வேளையிலும் வெள்ளைப் பந்தில்தான் பயிற்சி.

இம்முறை நெட் ப்ராக்டீஸில் ஒரு மாறுதல். பந்தயம் போலவே இரு அணிகளாகப் பிரிந்து கொண்டு ஆடிக் கொண்டிருந்தார்கள். (ஃபீல்டிங்குக்கு அனுமதிக்கப்பட்ட ஒருசில உள்ளூர் இளைஞர்களுக்கு பிறவிப்பயன் பெற்ற உற்சாகம் – கண்களில் உலகக் கோப்பைக் கனவு!)

எப்படியோ உள்ளே வந்து காலரியிலும், நாற்காலியிலுமாக உட்கார்ந்து கொண்ட இளம் பார்வையாளர்களிடமிருந்து உற்சாகக் கூக்குரல். அவர்களைப் பார்த்து பஸ்கி



• பயிற்சியில் வீரர்கள்



• சந்தீப் படேல்



• கும்ளே, (புதுமுகம்) டேவிட் ஜான்சன்



• அஜய் ஜடேஜா




• காம்ப்ளி மற்றும் டாக்டர் : யாருக்கு செக்கப்?

எடுப்பது போல் செய்கை காட்டி விட்டு, முட்டியைத் தொட்டுக் காண்பித்தார் 'போங்கு அப்பீல்' புகழ் மோங்கியா. (வலிக்கிறதாம்! உட்கார்ந்து உட்கார்ந்து எழுந்து!) மகிழ்ந்து சிலர் விசிலடிக்க, "Bye எடுக்க விடாம செய்தாத்தான் அணியிலிருந்து bye சொல்லாம இருப் பாங்க" என்று ஒருவர் நறுக்காகக் கமெண்ட் அடிக்க, தமிழறியா மோங்கியா தடையின்றி சிரித்து வைத்தார்.

**செ**த்தாக அங்குமிங்கும் நடமாடிய சச்சினை "பாஸ்" என்றே அழைத்தனர் பல விளையாட்டு வீரர்கள்.

"அவர்தான் புதுமுகம்" என்று சக நிருபர் ஒருவர் காட்டிய திசையில் சுமாரான உயரமும், சிவந்த மேனியும், கொஞ்சம் ஜில்பா தலையுமாக கர்நாடகத்து டேவிட் ஜான்சன்.

"கண்ணை மூடிட்டு ஆறு பேரை கர்நாடகாவுலேருந்து செலக்ட் பண்ணியிருக்கீங்களே, என்ன நியாயம்?" என்று விஸ்வநாத்தைப் பிடித்து நறுக் கென்று கேட்டு மடக்கலாம் என்று அங்குமிங்கும் தேடினால், ஆள் அம்பேல்!

வரவில்லையாம்! கடைசி நாளன்று வரலாம் என்று காற்றில் தகவல் வந்தது.

"மெட்ராஸிலே பயிற்சி எடுத்துக் கிட்டா எந்த சவாலையும் சமாளிக்கலாம்" என்று ஒருமுறை ஆஸ்திரேலியப் பந்து வீச்சுப் பிரபலம் டென்னிஸ் லில்லி கூறியதுண்டு. அப்படி ஒரு சீதோஷ்ணம்! பாதிப் பேர் வதங்கிப் போயிருந்தார் கள்.

தனது முத்திரை யான ரிஸ்ட்-ஸ்ட்ரோக்ஸையும், அற்புத 'கேட்ச்'சுகளையும் அவ்வப்போது (வயிற்று வலியையும் மீறி) வெளிப்படுத்திக் கொண்டிருந்தார் கேப்ட... சாரி, அசாருதீன். நடுவே கிடைத்த ஓய்வில் "ஹவ் ஆர் யூ?" என்ற சகஜ விசாரிப்புக்குக் கூட திருக்குறள் சைஸ் புன்னகையே பதில்.

**பா**சமும் பொறுமையுமாக நண்டுசிண்டுக்கெல்லாம் ஆட்டோகிராப் போட்டுவிட்டு தலைதெறிக்க மைதானத்துக்குள் ஓடிய விக்ரம் ரத்தோர்;

'ஜஸ்ட் ஒன் மினிட்' என்றபடி அவசரமாக பிஸ்லேரியைக் குடித் துவிட்டு டபுள்-அப் செய்த உதவி காப்டன் கும்ப்ளே;

இம்மியும் கவனம் பிசகாமல் ப்ராக் டீஸே கதியென்று கிடந்த வெங்கடேஷ் பிரசாத்;

"பந்தை இப்படிக் கையாளலாமே" என்று விதவிதமான அபிநயங்களோடு தட்டிக் கட்டளையிட்டுக் கொண்டிருந்த சச்சின் டெண்டுல்கர்...

– ஸ்ரீலங்காவிலிருந்து நம் அணி சிரித்த முகத்துடன் வர வாய்ப்பு உண்டு என்று சின்னதாக ஒரு நம்பிக்கைப் பூ எட்டிப் பார்த்தது, நமக்கு.

**- குல்லூ**

வண்ணப்படங்கள், படங்கள் : **சாரி**

# சம்மன்



**நா**ன் யாரைக் கோபித்துக் கொள்ள முடியும், பாழாய்ப்போன அந்தக் கடவுளைத் தவிர?

எல்லாருக்கும் என்னென்னவோ உத்தியோகம். போஸ்ட்மேனாயிருந்தால் கூட ஒருநாள் நல்ல சேதி. இன்னொரு நாள் கெட்ட சேதி என்று காம்பன்சேட் ஆகிவிடும். எனக்கு?

என்னைப் பார்த்தாலே முகத்தில் கதவைச் சாத்தும் உத்தியோகம். என்னைக் கண்டாலே கரப்பான் பூச்சியை, மரவட்டைப் பூச்சியைப் பார்ப்பது போல் அருவருப்பு.

ஓட்டலில் சர்வ் செய்தால் கூட அவமானமில்லை – கஷ்டமில்லை. ஆனால் தினம் தினம் இந்த சம்மனை சர்வ் செய்வதற்குள் நான் படும்பாடு? இருந்துகொண்டே இல்லை என்பார்கள். என் பெயர் எம்.எஸ். மணி; எம். சுப்பிரமணியல்ல என்பார்கள். டோர் நம்பர் பதினேழு, பழைய நம்பர் என்பார்கள்.

என்னால் என் நண்பர்கள், உறவினர்கள் வீட்டுக்குக் கூட சந்தோஷமாகப் போக முடியாது.

'சும்மா வந்தியா, சம்மனோடு வந்தியா?' என்பார்கள்.

'ஆமை புகுந்த வீடும் அங்கமுத்து வந்த வீடும்' என்று என் காதில் விழும்படியே சொல்வார்கள்.

அமீனா உத்தியோகம் பார்த்துக் கொண்டு இதற்கு நான் யாரை நொந்துகொள்ள முடியும்?

அன்று கோர்ட்டிலிருந்து இளம்பினேன். வாசலில், காரில் வந்து உட்கார்ந்து விட்டார் ஜட்ஜ். கையைக் காட்டிக் கூப்பிட்டார். பயந்தபடியே ஓடினேன். கையில், ஒட்டியகவர் ஒன்றைக் கொடுத்தார்.

"மந்தைவெளி



# சல்சா

**எ**ன்றைக்கோ டாக்டர் எனக்குள்ளிருந்த பிளட் பிரஷரைக் கண்டுபிடித்திருந்தாலும் இன்றுதான் அதை முழுமையாய் உணருகிறேன். ஐயோ. அப்படி எதுவும் நேர்ந்துவிடக்கூடாது.

நேற்று எதற்கோ எதேச்சையாய் சமையல்கட்டுப் பக்கம் போனபோதுதான் கிசுகிசு வென்று உள்ளே இரண்டு குரல்கள் கேட்டதைக் கவனித்தேன். நான் கோடீஸ்வரன். சமையல் கட்டுப் பக்கம் போக வேண்டிய அவசியமே இல்லை. பல சமயங்களில் காப்பிக்கும் டிபனுக்கும் இன்டர்காம் வழியாய்த்தான் ஆர்டர்கள் பறக்கும்.

ஆனால், இன்று?

நான் வந்ததே நல்லதுக் காயிற்று. இல்லாவிட்டால் அந்த பயங் கரத்தைக் கண்டுபிடித்திருக்க முடியுமா? எகிறத் தயாராய் இருந்த ரத்தக் கொதிப் பைச் சமாதானப்படுத்தி மீண்டும் உற்றுக் கேட்டேன். அல்லது ஒட்டுக்கேட்டேன் என்றே வைத்துக் கொள்ளுங்களேன்.

"அம்பி... உன்னைத்தான் நம்பியிருக் கேன். என்னைக் கைவிட்டு விடாதே..." என்று கிசுகிசுப்பிலும் ஸ்பஷ்டமாய், தெளிவாய்க் கேட்டது. சந்தேகமேயில்லை. சுரேகா என்ற என் கோடீஸ்வரப் பெண்ணின் குரல்தான். ஐயோ. என் பார்ட்னர் ஜெகனுடைய பையனை இவளுக்குக் கல்யாணம் பண்ணிக் குடும்பத்தையும் பிஸின சையும் ஒருசேர வளர்க்கலாம் என்ற என் திட் டத்தில் மண்ணா?

கேவலம். ஒரு சமையல்காரனுடனா என் பெண் ரகசியம் பேசிக் கொண்டிருக்கிறாள்? அதுவும் என்ன மாதிரி வசனம்!

அப்பாவி போல் வெளியே வந்து என்னைக்

மகாலிங்கத்திடம் கொடுத்து விடு."

"எஸ் சார்."

கார் புறப்பட்டு விட்டது.

கோர்ட் விஷயமானால் இப்படிக் கொடுக்க மாட்டார். மகாலிங்கமும் நல்லவர்தான். அவரும் ஜட்ஜ் சாரும் நண்பர்கள் என்று சொல்லிக் கொண்டார்கள். என்னவோ, ஏதோ பெரிய இடத்து

## ஆர்.பி. சாரதி

விஷயம். எதுவும் இருக்கலாம். வீட்டுக்குப் பக்கம்தான். புறப்பட்டேன்.

மகாலிங்கம் பங்களா. வாட்ச்மேன் பார்வையே என்னை விரட்டியது. அல்சேஷன் வேறு. மகாலிங்கத்தின் மனைவி பார்வை அல்சேஷன் பார்வையை அன்புப் பார்வையாக்கி விட்டது.

"என்ன?" கேட்டுக் கொண்டே மாடியிலிருந்து இறங்கினார் மகாலிங்கம். பட்டு வேட்டி - மேலே சால்வை. நெற்றியில் பட்டைப் பட்டையாய் விபூதி.

கவரை நீட்டினேன். "ஜட்ஜ் சார் கொடுத்தனுப்பினார்."

வாங்கியதில் ஒரு மிடுக்கு. 'சம்மன் இல்லையே?' கவரைப் பிரித்தார். முழுவதும் கூடப் படிக்கவில்லை.

"பாரு, அல்வாவை அப்படியே கொண்டா. இவர் வாயில் போடணும்."

எனக்கா? அல்வா வரவேற்பா?

"ஜட்ஜ் பையன் சம்மதிச்சுட்டானாம்! நம்ம நிம்முவைக் கல்யாணம் செய்துக்க ஏற்பாடு செய்யச் சொல்லிட்டார்."

வாழ்க்கையில் முதல் முறையாக ஒரு கவரைக் கொடுத்துவிட்டு அல்வா வாங்கிய சந்தோஷத்தோடு திரும்பினேன்.

கவனிக்காமல் மடமடவென்று அவள் ரூமுக்குப் போய் விட்டாள். அந்த ராஸ்கல் ஐந்து நிமிஷத்தில் அவளைத் தொடர்ந்து அவளின் ரூமுக்குள். ஐயோ.

அடுத்த நாளுக்குள் தீர்மானத்துக்கு வந்தேன். அவனுக்கு கல்தா கொடுப்பது அப்படி ஒன்றும் சிரமமான வேலையில்லை. ஒரு தங்க நெக்லஸ் அவனின் பெட்டிக்குள்.



அடுத்த நாளே கூப்பிட்டு விசாரணை. 'போடா வெளியே' என்று இரண்டே வார்த்தையில் ஒத்திகை பார்க்காத நாடகம் ஒன்று நிகழ்ந்து விட்டது.

"சார்... எனக்கு வேலை போனது பற்றியில்லை சார்... இந்த வீண் பழியை என்னால் பொறுக்க முடியலை.. கண்டுபிடியுங்க சார்... நான் உங்க வீட்டு உப்பைத் தின்னவன்" என்று டயலாக்கெல்லாம் பேசினான் அந்தச் சமையல்காரப்பயல். உப்பைத் தின்னவனாம். விட்டால் என் பெண்ணையே உப்பு மூட்டை தூக்கிக் கொண்டு போயிருப்பானே?

என் மகள் கூடக் கொஞ்சம் பரிந்து பேசிப் பார்த்தாள். ஏழை அது இதென்றாள். 'நீ சின்னப் பெண்; உனக்கு இதெல்லாம் புரியாது...' என்று தயாரித்து வைத்திருந்த வசனத்தைப் பேசினேன்.

அடுத்த நாள். போனடித்தது. மாடியில் நான் எடுத்த அதே நேரம் கீழே என் பெண்ணும் எடுத்திருப்பாள் போலும்.

## பாமா கோபாலன்

"ஹாய்... இது என் சுரேகாதானே? யுரேகா..." என்று இளமையான ஆண் குரல் கேட்டது. யார் குரல்?

"நம் காதலை வளர்க்க எனக்கு உதவியாய் இருந்த எங்க வீட்டுச் சமையல்காரன், நான் எதிர்பார்க்காத விதத்தில் நெக்லஸ் திருடிட்டான். இனிமேல் நமக்கு யார் லெட்டர்ஸ் எக்ஸ்சேஞ்ச் பண்ணிக்குடுப்பா? நம் காதல் எங்கப்பாவுக்குத் தெரிஞ்சா தோலை உரிச்சுடுவார். படு ஸ்டிரிக்ட்..." என்று குருவிக்குஞ்சு போல் குரல் நடுங்கியது.

- பத்து வினாடி மௌனம்.

"என்ன பதிலே காணும்..? சுரேஷ்...?"

பொட்டில் அடித்தாற்போலிருந்தது எனக்கு.

சுரேஷ் என் பிஸினெஸ் பார்ட்னர் ஜகனுடைய மகன்!



• கிருஷ்ணவேணி

# ஆடப் பிறந்தவர்!

## வித்தகர் :

மூன்று வயதுக் குழந்தை, 'மகான்... காந்தி மகான்...' என்ற சினிமாப் பாட்டுக்கு இஷ்டப்படி ஆடிய நடனத்தைப் பார்த்து வியந்தார்கள், ருக்மணிதேவியும், கலாக்ஷேத்ரா சங்கர மேனனும். 'பிற்காலத்தில் இவள் பெரிய நடன மேதையாக வரப் போகிறாள்.'

“இந்தக் குழந்தைக்கு முறைப்படி நல்ல பயிற்சி தரணும். நன்றாகப் பிரகாசிப்பாள்” என்று குழந்தையின் பெற்றோரிடம் சொன்னார் ருக்மணிதேவி. நடனம் என்றால் முகம் சுளிக்கிற அந்தக் காலத்தில், பெற்றோர் தயங்கினார்கள். 'கல்யாணம் ஆகிறவரை கற்றுக் கொள்ளட்டும்' என்றார்கள். ஒருவாறு சம்மதம் பெற்று ருக்மணிதேவி அந்தக் குழந்தையை ஸ்காலர்ஷிப் கொடுத்துப் படிக்க வைத்தார். பத்து வருடங்கள் 'அத்தை'யின் ஏற்பாட்டில் நடனப் பயிற்சி. கலாக்ஷேத்ரா தொடர்புடைய அனைவருக்கும் ருக்மணி தேவி 'அத்தை'தான்!

“என்னைச் சுமந்து பெற்றது அம்மாதான் என்றாலும், களிமண்ணைப் பிசைந்து அழகான உருவம் தருகிற மாதிரி, என்னைப் பண்படுத்தியவர் அத்தைதான். நாட்டியம் மட்டுமில்லை. ஒரு நல்ல மனுஷியாக, குடும்பப் பெண்ணாக, உயர்வான வாழ்க்கை முறையைப் பற்றியெல்லாம் கற்றுக் கொடுத்து உருவாக்கியவர் அவர்” என்று தம் ஆசானைப் பற்றிய நினைவுகளில் லயிக்கிறார் கிருஷ்ணவேணி லக்ஷ்மணன். நாட்டிய நாடகங்களில் தனி முத்திரை பதித்தவர்.

“ஆரம்பம் முதலே கிளாஸிக்கல் பரதம் மட்டுமே நான் கற்றுக் கொள்ள வேண்டும் என்பதில் அத்தை பிடிவாதமாக இருந்தார். மேலை நாடுகளில் பாலே கிளாஸிக்கல் பண்ணுகிறவர்கள் வேறு விதமான கிராமிய நடன முறைகளில் (Folk) கவனம் செலுத்த மாட்டார்கள். இரு வகையினரும் தனித் தனியாகவேதான் செய்வார்கள்.

“இருந்தாலும் சுற்றுப் பயணம் போகும்போது குழுவில் மற்றவர்கள் ஜனரஞ்சகமான ஆட்டங்களில் பெயர் வாங்குகிறபோது நமக்கு அந்த வாய்ப்பில்லையே என்று ஏக்கமாகத்தான் இருக்கும். ஆனாலும் அது அத்தையின் விருப்பமாயிற்றே?” என்கிறார் கிருஷ்ணவேணி.

இவருடைய கணவர் லக்ஷ்மணன் ஒரு வங்கி அதிகாரி. நாட்டியக் கலையைப் பற்றி அவருக்கு அவ்வளவாக நல்ல அபிப்பிராயம் கிடையாது! ஏதோ சினிமாவில் வருகிற நடனம் என்கிற மாதிரியே எண்ணியிருந்தவர் அவர்.

“திருமணத்துக்குப் பின், நாட்டியம் ஆடுவதை உடனே நிறுத்திவிடு என்றார். நானும் அவருடைய முடிவை ஏற்று, நாட்டியத்தை விட்டு விலகிவிடுவது என்றுதான் தீர்மானித்தேன். அந்த நேரத்தில் 'குற்றாலக் குறவஞ்சி' நாட்டிய நாடகம் ஏற்பாடாகியிருந்தது. நான் வசந்த வல்லியாக ஆட வேண்டும். உடனே அத்தை ருக்மணிதேவியே என் கணவரிடம் பேசி, இந்த ஒரு நிகழ்ச்சிக்கு மட்டும் அனுமதி தாருங்கள் என்று கேட்டு, சம்மதமும் பெற்றார். அந்த நாடகம் நடந்தது, என் கணவரும் பார்த்தார். நாடகம் முடிந்ததும் அவர் சொன்னது: 'இதுதான் நீ பயின்ற நாட்டியம் என்றால்

கடைசி வரை ஆடிக் கொண்டே இரு...

"நான் இந்தக் கலைக்காகவே பிறந்தவள் என்கிற மாதிரி பாராட்டி ஆதரவும் உற்சாகமும் தந்தார்" என்கிறார் கிருஷ்ணவேணி. அது மட்டும் இல்லை, ஒவ்வொரு நிகழ்ச்சியின் போதும், ருக்மணிதேவி, தனக்கு அருகிலேயே இடம் கொடுத்து அமர்த்திக் கொண்டது கிருஷ்ணவேணியின் மாமியாரைத்தான்!

"உன்னைப் பார்த்தால் என்னோடே மாட்டுப் பொண்ணுன்னே தோண மாட்டேங்கறது. சீதையா, ஆண்டாளாவே தோணறது" என்பாராம் அந்த அம்மையார்!

முற்றிலும் பரதநாட்டியக் கலைக்கே தம்மை அர்ப்பணித்துக் கொண்டிருந்தாலும் இவர் கதகளி, மோகினியாட்டம், குச்சுப்புடி போன்றவற்றிலும் ஓரளவு பயிற்சி பெற்றிருக்கிறார். இவற்றின் நுட்பங்கள் உயர்தரமான பரதநாட்டிய நடனங்களுக்கும் உதவுகின்றனவாம். முகத்தின் தசைகளைக் கட்டுப்படுத்தி பாவங்களைச் சிறப்பாக வெளிப்படுத்தக் கதகளி உதவுகிறது என்கிறார்.

பாகவத மேளா சம்பிரதாயத்தில், துறையூர் ராஜகோபாலசர்மாவின் பாட்டுடன், மெலட்டூர் பாலு பாகவதர் கற்றுக் கொடுத்தது 'துருவ சரித்ரம்' நாட்டிய நாடகம். இரண்டு பெரியவர்களிடமும் குருகுலவாசம் மாதிரி, நிறையக் கற்றுக் கொண்டிருப்பதாய்ச் சொல்கிறார் கிருஷ்ணவேணி.

# கிருஷ்ணவேணி லக்ஷ்மணன்

ராமாயண நாடகங்கள் ஆறு பகுதிகளாக நடைபெற்றன. மைசூர் வாசுதேவாச்சார் இசை அமைப்பில் மிகவும் பிரபலமான இந்த நாடகங்களில் சீதை பாத்திரம் இவருக்கு. 'கிருஷ்ணவேணின்னா சீதை; சீதைன்னா கிருஷ்ணவேணி' என்று பெயர் வாங்கித் தந்த நாடகம் இது. ராஜாஜி பார்த்து விட்டு "ராமாயணத்துக்கு நீ பெருமை சேர்த்தாய். இப்படி ஒரு சிஷ்யை கிடைக்கப் புண்ணியம் பண்ணியிருக்கே..." என்று ருக்மணிதேவியிடம் சொல்லியிருக்கிறார்!

கிருஷ்ணவேணி, சவாலாக ஏற்று நடனமாடிய பாத்திரம் ஒன்று உண்டு. முற்றிலும் வித்தியாசமான பாத்திரம். 'இப்படி ஒரு நாடகத்தை நடத்தத்தான் வேண்டுமா' என்று ருக்மணி தேவியைக் கண்டித்துச் சிலர் முகம் சுளிக்கப் பண்ணிய நாடகம்.

அதுதான், 'அஜாமிளோபாக்கியான' நாடகத்தில் கிருஷ்ணவேணி லக்ஷ்மணன் ஏற்று நடித்த 'குலடா' என்கிற தாசியின் பாத்திரம். திருவனந்தபுரம் மகாராணி சேதுபார்வதிபாய் விரும்பியதின் பேரில் சுவாதித் திருநாள் மகாராஜாவின் கீர்த்தனைகளோடு உருவான நாடகம் அது. சுவாதித் திருநாள் கீர்த்தனைகளைச் செம்மங்குடி சொல்லிக் கொடுத்தார். மேடையில் தானும் மது அருந்தி, அஜாமிளனுக்கும் புகட்டுகிற காட்சிகள் வரும் என்றாலும் விரசம் தலைகாட்டாமல், அமைக்கப்பட்டிருந்தது! 'செய்த தவறை உணர்ந்து மன்னிப்புக் கேட்பது' என்கிற கதையின் மையக் கருத்து அத்தையைக் கவர்ந்ததால் இதை நாடகமாக்க இசைந்தார்களாம்.

"இந்த நாடகத்தில் ஆடுவது பற்றி அத்தையுடன் நிறைய விவாதித்தோம். உன்னால்தான் பலவிதமான நுட்பங்களை வெளிப்படுத்த முடியும் என்று சொல்லி என்னை நடிக்க உற்சாகப்படுத்தினார். ஆனால் இந்த நாடகம் என் கணவருக்கே - அதன் கலையம்சத்துக்காக மிகவும் பிடித்தது! 'குடிக்கிற மாதிரி எல்லாம் நடிக்க எப்படிக் கற்றுக்கொண்டாய்?' என்று கூட வியந்து கேட்டார்" என்கிறார் கிருஷ்ணவேணி லக்ஷ்மணன்.

ருக்மணிதேவிக்குப் பிடிக்காத பாத்திரம் சிலப்பதிகாரத்தில் வரும் கோவலன். அஜாமிளனைக் கூட ஏற்றுக் கொண்ட அவரால், இந்தப் பாத்திரத்தை ஏற்க முடியவில்லை. அதனால் இத்தனை காலமும் சிலப்பதிகாரத்தை நாடகமாக்கும் முயற்சியில் மட்டும் கலாக்ஷேத்திரா ஈடுபடவில்லையாம்! சிவகீதி மாலா போன்ற நாட்டிய நாடகங்களை ஏற்கெனவே தயாரித்துள்ள கிருஷ்ணவேணி, இப்போது, சிலப்பதி காரத்தின் கலைநுட்பச் சிறப்புக்காக இதை எடுத்துக் கொண்டு நாட்டிய நாடகமாக்க ஆசைப்படுகிறார்.



• 'ராமாயணம்' நாட்டிய நாடகத்தில், சீதையாக...

— சுப்ரபாலன்

படம் : யோகா

களத்தில் கல்கி :

## வனத்துறை அமைச்சருடன் ஓர் அதிரடி விசிட்!

# வனத்துறை நர்சரி: எங்கே மஸ்டர்ரோல்?

"தமது பிறந்தநாளன்று மரக்கன்றுகள் நடப்பட வேண்டும் என்று முதல்வர் கலைஞர் அறிவித்திருந்தார் அல்லவா! அதன்படி எங்கள் பகுதியில் மரக்கன்றுகளை நடுவதற்காக, வனத்துறையினரை அணுகினோம். அவர்களும் 'தாராளமாக நடலாம்; அதற்கு கார்ப்பரேஷனிடம் நோ அப்ஜக்ஷன் சர்டிபிகேட் வாங்கிக் கொடுப்பது உங்கள் பொறுப்பு' என்றார்கள். நாங்களும் வாங்கிக் கொடுத்தோம். ஆனால் இதுவரை எந்த நடவடிக்கையும் எடுக்கப் படவில்லை!" என்று நம்மிடம் முறையிட்டார்கள் அயன்புரம் பொது நலச் சங்கத்தினர்.

அவர்களின் முறையீட்டை, வனத்துறை மற்றும் கால்நடை பராமரிப்புத்துறை அமைச்சர் பொங்கலூர் என். பழனிச்சாமியிடம் நாம் சொன்னபோது, "அப்படியா விஷயம்! அங்கே என்னதான் நடக்கிறது என்று நேரடியாகவே போய்ப் பார்த்து நடவடிக்கை எடுக்கலாமே!" என்றார்.

"அதோடு இன்னும் சில இடங்களுக்கும் போகலாமா?" என்றோம்.

"நீங்கள் எங்கே வரச் சொன்னாலும் வருகிறேன். சட்டசபை முடிந்ததும் இன்று மாலையே போகலாம்!" என்றார் அமைச்சர்.

அதன்படியே புறப்பட்டோம். அமைச்சரோடு நாமும் தமிழ்நாடு வனத்துறையின் தலைமைப் பாதுகாப்பு அதிகாரி கே.கே. சோமசுந்தரமும்.

முதலில் டவுட்டன் பகுதியிலுள்ள டேப்கோ (TAPCO) கேண்டீன். முட்டைபோண்டா, கோழி இறைச்சி மற்றும் பிரியாணி விற்கப்படும் இடம்.

"டேஸ்ட் எல்லாம் எப்படி இருக்கு? நல்லபடியா இருக்கா?" அங்கே சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒருவரிடம் விசாரித்தார் அமைச்சர்.

"நன்றாகத்தான் இருக்கிறது!" என்றார் அவர்.

"பயப்படாம சொல்லுங்க. நீங்க சொல்றதை வெச்சுத்தான் நாங்க செயல்பட முடியும்..."

"நெஜமாவே நல்லாத்தான் சார் இருக்கு!" என்றார் அவர்.

சமைக்கிற இடம், பாத்திரம் கழுவுகிற இடம் என்று கேண்டீன் பகுதிகளைச் சுற்றிப் பார்த்த அமைச்சர், "பண்டங்கள் நன்றாக இருந்தாலும் கேண்டீனின் சூழல் சுத்தமாக இல்லை. இப்படியிருந்தால் சாப்பிடுபவர்களுக்கு வியாதிதான் வரும்.

• கிண்டியில்.... • சாப்பிடுபவர்களிடம் விசாரிக்கிறார்....




இனிமேல் இப்படி இருப்பதைப் பார்த்தால் நான் நடவடிக்கை எடுக்க வேண்டியிருக்கும்.." என்ற அமைச்சர், அங்கே வேடிக்கை பார்க்கக் கூடியிருந்த சிலரிடம் சில பண்டங்களைப் பகிர்ந்து கொடுக்கச் சொன்னார்.

பிறகு அவர்களிடம், "எப்படி இருக்கிறது?" என்றார்.

அவர்களும் நன்றாகவே இருப்பதாகச் சொல்ல, தமது உதவியாளர் சுப்ரமணியத்தைச் சிறிது சாப்பிடச் சொல்லி விசாரித்தார். அவரும் நன்றாக இருப்பதாகவே சொல்ல, "சரி கிளம்பலாம் வாருங்கள்!" என்றார் நம்மிடம்.

"அனைவரையும் சாப்பிட்டுப் பார்க்கச் சொன்ன நீங்கள், ஏன் நீங்களே சாப்பிட்டுப் பார்த்திருக்கக் கூடாது?" என்றோம் நாம்.

"நான் சைவம். எட்டாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தவரை அசைவமாகத்தான் இருந்தேன். அப்போது மகாத்மாவின் சத்திய சோதனை படித்தேன். படித்து முடித்தவுடன் அந்தப் புத்தகம் என்னுள் ஒரு பாதிப்பை ஏற்



"நானும் முந்தைய ஆட்சி போலவே நடந்து கொண்டால் பத்துக் கோடி ரூபாய் எனக்கு லஞ்சம் தருவதாகத் தூது அனுப்பினார்கள்...."

• வனத்துறை நர்சரி : "மஸ்டர்ரோல் எங்கே?"



படுத்திவிட்டது. விளைவு? அசைவம் சாப்பிடுவதை அடியோடு விட்டு விட்டேன்!"

அண்ணா நகரிலுள்ள வனத்துறையின் நர்சரி கார்டன். சுற்றிப் பார்த்தார் அமைச்சர்.

"ஏன் இந்த மரக்கன்றுகளெல்லாம் நோய்வாய்ப்பட்டிருக்கின்றன?"

"மருந்து தெளித்திருக்கிறோம் சார். சரியாகிவிடும்!" என்றனர் ரேஞ்சர் விருதகிரியும் உதவி வனத்துறை அலுவலர் இக்பால் பாஷாவும்.

"பொது மக்களே முன் வந்து மரக்கன்றுகள் நட ஆர்வம் காட்டினாலும் நீங்கள் ஒத்துழைப்புத் தருவதில்லையாமே! சென்னை நகரை அழகுபடுத்தும் திட்டத்தின் ஒரு பகுதி

• டவுட்டன் கேண்டீன் : "சுத்தம் போதாது!"



• விளம்பரப் பலகைகளை மறைக்கிறது என்று வெட்டப்படும் மரங்கள்



தானே மரக்கன்றுகள் நடப்படுவதும்? அப்படியிருந்துமா இப்படி நடந்து கொள்கிறீர்கள்?"

"அப்படியெல்லாம் இல்லை சார். நாங்கள் முழு ஒத்துழைப்பும் தருகிறோம்."

"தகவல்கள் அப்படி இல்லையே!" என்ற அமைச்சர் நம்மைப் பார்த்து, "உங்களிடம் சொல்லப்பட்ட புகாரை நீங்களே இவர்களிடம் விசாரியுங்கள்!" என்றார்.

அயன்புரம் பொது நலச் சங்கத்தினர் நம்மிடம் கூறிய புகாரை அவர்களிடம் கூறினோம்.

"அவர்கள் கார்ப்பரேஷனிடமிருந்து நோ அப்ஜக்ஷன் சர்டிபிகேட் வாங்கித் தரவில்லை. அதனால்தான்..." என்றார் இக்பால் பாஷா.

"நோ அப்ஜக்ஷன் சர்டிபிகேட் வாங்கிக் கொடுத்திருக்கிறார்கள். அதனுடைய ஜெராக்ஸ் பிரதியைக்கூட எங்களிடம் காண்பித்தார்கள். நீங்களும் அப்போது 'நூறு என்ன, ஐநூறு மரக்கன்றுகளே நட்டுத் தருகிறோம்' என்றெல்லாம் சொன்னீர்களாம். ஆனாலும் அதன் பிறகு எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை என்பதுதான் அவர்களுடைய குறை..."

"அவர்கள் நோ அப்ஜக்ஷன் சர்டிபிகேட் வாங்கித் தரவில்லை. அதனால்தான்..." என்று மறுபடியும் இக்பால் பாஷா கூற, அமைச்சர் குறுக்கிட்டார்.

"என்ன செய்வீர்களோ, ஏது செய்வீர்களோ எனக்குத் தெரியாது. நானையே அந்தப் பகுதியில் மரக்கன்றுகள் நடப்படுவதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். இல்லையானால் கடும் நடவடிக்கை எடுத்துவிடுவேன்!" என்று எச்சரித்ததோடு, உங்கள் நர்சரியின் கணக்கு வழக்குகளையெல்லாம் காண்பியுங்கள். பார்க்கிறேன்..." என்று நர்சரி கார்டனிலிருந்த அலுவலகத்திற்குச் சென்றார் அமைச்சர்.

"கணக்கு வழக்குகள் வைத்திருக்கிற சம்பந்தப்பட்ட நபர்,



• அண்ணாநகர் வனத்துறை நர்சரியில்...

வைரல் ஃபீவர் என்று லீவில் போய்விட்டார் சார்."

"சரி, இன்று எத்தனை பேர் வேலைக்கு வந்திருக்கிறார்கள்? நேற்று எத்தனை பேர் வேலைக்கு வந்திருந்தார்கள் என்பதறகான மஸ்டர் ரோல் இருக்குமே. அதைக் காட்டுங்கள்...."

"அப்படியெல்லாம் ஏதும் நாங்கள் வைத்துக் கொள்வதில்லை சார்..."

"சரி, மரக்கன்றுகளைப் பராமரிப்பதற்காக இங்கே எத்தனை பேர்தான் வேலை பார்க்கிறார்கள்?"

• திருமதியுடன் அ...



**“ஆடு, மாடுகள் மேய்ப்பதிலிருந்து விவசாய வேலைகள் வரை எல்லாமே எனக்கு அத்துபடி. ஏனெனில் எனது குடும்பமே ஒரு விவசாயக் குடும்பம்!'' என்று சொல்லும் அமைச்சர் பொங்கலூர் பழனிச்சாமியின் சொந்த ஊர் கோவை மாவட்டத்திலுள்ள பொங்கலூர். விவசாயம் தவிர இப்போது சிறிய அளவிலான சிமெண்ட் தொழிற்சாலைகள் வரையிலான வியாபாரத்திலும் இறங்கிவிட்டதால், கோவைக்கே குடி**

"சராசரியாக இருபத்தைந்து பேர் பார்க்கிறார்கள்...''

''அவர்கள் எத்தனை நாள் வேலைக்கு வந்தார்கள்? ஒவ்வொரு நாளும் எத்தனை பேர் வந்தார்கள் என்பதற்கான எந்தவிதமான ரெக் கார்டும் இல்லாமல் இருக்குமானால் எப்படி? நீங்கள் சொல்வதுதான் கணக்கு என்றால், தவறு நடக்கவில்லை என்று எப்படி நம்புவது?''

அமைச்சரின் இந்தக் கேள்விக்கு அவர்களிடம் பதிலே இல்லை!

"எல்லா கணக்கு வழக்குகளையும் நாளைக்கு என் வீட்டுக்கு எடுத்துக் கொண்டு வந்து காண் பிக்க வேண்டும். இனி மஸ்டர்ரோல் பரா மரிக்க வேண்டும். இல்லையென்றால் விளைவு கள் மிகவும் கடுமையாக இருக்கும்!'' என்று எச்சரித்துவிட்டுப் புறப்பட்டார் அமைச்சர்.

அடுத்து கிண்டி தொழிற்பேட்டையி லுள்ள டேப்கோ கேண்டீன். சாப்பிட்டுக் கொண் டிருந்தவர்களிடம் விசாரித்தபோது கவையெல் லாம் நன்றாக இருப்பதாகவே சொன்னார்கள்.

"இந்த கேண்டீனில் ஒரு நாளைக்கு எத் தனை முட்டை, கோழிகள் செலவாகின்றன?'' கேண்டீன் ஊழியர்களிடம் கேட்டார் அமைச்சர்.

"350 முட்டைகள். பத்திலிருந்து பதினைந்து கோழிகள் வரை செலவாகின்றன சார்.''

"இன்று எத்தனை முட்டைகள் வந்தன?''

"இன்றைக்கு முட்டைகள் ஸ்டாக் இல்லை யென்று டேப்கோ அலுவலகத்தில் சொல்லி விட்டார்கள். அதனால் இன்று வெளியில்தான் வாங்க வேண்டியதாகி விட்டது. அதோடு, வெளியில் விற்பதைவிட டேப்கோ அலுவல கத்தில் விற்கப்படும் கோழியின் விலை சிறிது கூடுதலாக இருக்கிறது. இது பற்றி அமைச்சர் நடவடிக்கை எடுத்தால் எங்களுக்கு மிகவும் உதவியாக இருக்கும்!'' என்றார்கள் கேண்டீ னைச் சேர்ந்தவர்கள்.

"நிச்சயம் கவனிக்கிறேன். அதே போல், காண்ட்ராக்ட்காரர்களான நீங்களும் முட்டை, கோழி போன்ற எல்லாவற்றையும் டேப் கோவில்தான் வாங்க வேண்டும். அப்போது தான் அரசுக்கு லாபம் கிடைக்கும். அந்த லாபம் மீண்டும் மக்கள் நலனுக்கே அரசால் செலவழிக்கப்படும். சரியா....?'' என்று அமைச்சர் புறப்பட்டபோது, 'இப்படி எல்லா மினிஸ்டர்ஸும் அங்கங்க விசிட் பண்ணி சோதனை செஞ்சாத்தான் தப்பெல்லாம் நடக் காம இருக்கும்...' என்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவர்களிடமிருந்து கமெண்ட் கேட்டது!

“எனது துறை ஆடு, மாடு, காடு (கால் நடைப் பராமரிப்புத்துறை மற்றும் வனத்துறை களைத்தான் இப்படித் தமாஷாகச் சொல்கிறார் அமைச்சர்!) என்பதால் சென்னைக்கு வெளியே போய்ப் பார்த்திருக்க வேண்டும். இப்போது சட்டசபை நடப்பதால் வெளியூர் விசிட்களுக் குச் சாத்தியமில்லாமல் போய்விட்டது. இன் னொரு சமயம் நாம் வனப் பகுதிகளுக்குச் சென்று பார்த்து வருவோம்...!'' என்று வீட்டுக் குச் சென்றதும் அமைச்சரே பேச்சைத் துவக்கி னார்.

"சென்ற ஆட்சியின்போது சந்தன மரங்களை ஏலம் விட்டதில் ஊழல் நடந்திருப்பதாகச் சொல்லியிருக்கிறீர்களே, அது பற்றிக் கொஞ்சம் விளக்கமாகச் சொல்லுங்களேன்!''

"உலகத்திலேயே தரமான சந்தன மரங்கள் விளைவது தமிழகத்தில்தான். அப்படியிருக்கும் போது, நாம் வைப்பதுதானே விலையாக இருக்க வேண்டும்? ஆனாலும் வியாபாரிகள் வைத்ததே விலையாக இருந்தது. இந்தமுறை நான் அப்படி நடக்க விடவில்லை. இதையறிந்த ஏலதாரர்கள், நானும் முந்தைய ஆட்சி போலவே நடந்து கொண்டால் பத்துக் கோடி ரூபாய் எனக்கு லஞ்சம் தருவதாகத் தூது அனுப்பினார்கள். நான் ஒப்புக் கொள்ள வில்லை. அதனால்தான் சென்ற ஆட்சியில் 12 கோடி ரூபாய்க்கு ஏலம் போன அதே அளவு சந்தன மரத்தை, இந்த ஆண்டு 41 கோடி ரூபாய்க்கு ஏலம் விட்டிருக்கிறேன். சென்ற ஆட்சியில் ஒரு டன் சந்தன மரத்தின் சராசரி விலை 2.60 லட்சம்தான். இப்போது நான் விற் றிருப்பதன் சராசரி விலை 5.15 லட்சம்.''

"இன்னும் என்னென்ன நடவடிக்கைகள் எடுத்திருக்கிறீர்கள்?''

"வந்தவுடனேயே 62 ஐ.எஃப்.எஸ். அதிகாரி

# "அப்பப்பா... ஒரு பட்டம் வாங்குவதற்குள்..."

**வந்து விட்டார். பட்டதாரி. ஐம்பது வயது.**

**"நான் மாணவனாக இருந்தபோது போராட்டங்களில் ஈடுபட்டதால், அப்பப்பா... ஒரு பட்டம் வாங்குவதற்குள் ஏகப்பட்ட கல்லூரிகள் மாற வேண்டியதாகி விட்டது. கல்லூரி முதல்வர்களிடம் எனக்கு அப்படியொரு நல்ல பேர் போங்கள்!" என்று தமாஷாகச் சொல்லும் அமைச்சரின் மனைவி திருமதி விஜயலட்சுமியும் அரசியல்வாதிதான். '89 தேர்தலில் நின்று தோற்றுப் போனவர் திருமதி! கோவை மாவட்டத்தின் தி.மு.க. செயலாளராக அமைச்சர் இருக்கிறார் என்றால், திருமதியார், கோவை கல்தான் பேட்டையின் ஒன்றியச் செயலாளராக இருக்கிறார். கணவரின் அரசியலுக்கும் பக்கபலமாக இருக்கிறார்....**

**சென்ற ஆண்டு கட்சி நிதிக்காக ஒரு கோடி ரூபாய் வசூலித்துக் கலைஞரிடம் கொடுத்து ஒரு சாதனையை ஏற்படுத்திய இவர், முதன் முதலில் '71 தேர்தலில் போட்டியிட்டு எம்.எல்.ஏ.வாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தாலும் இப்போதுதான் அமைச்சர் பொறுப்பு வழங்கப்பட்டிருக்கிறது.**

**அமைச்சர்களுக்கான பங்களாவில் குடியேறிய பிறகும் விவசாயத்தை அமைச்சர் விட்டுவிடவில்லை. "இங்கும் கறவை மாடுகளை வைத்துப் பராமரிக்கிறேன். வெளியில் பால் வாங்குவதில்லை. சமையலுக்கான காய்கறிகள், கீரைகள் ஆகியவற்றையும் வாங்குவதில்லை. இங்கேயே பயிரிட்டுத் தினமும் ப்ரெஷ்ஷாகப் பறித்துத்தான் சமைத்துக் கொள்கிறோம்!" என்கிறார் அமைச்சர்.**

களை மாற்றல் செய்தேன். கடந்த 25 ஆண்டுகளில் ஒரு ஐ.எஃப்.எஸ். அதிகாரி கூட சஸ்பெண்ட் செய்யப்பட்டதில்லை. நான் பொறுப்புக்கு வந்தவுடனேயே ஊட்டி தெற்கு மற்றும் திண்டுக்கல் மாவட்டங்களின் வனத்துறை அதிகாரிகளை சஸ்பெண்ட் செய்தேன். காரணம் அவர்கள் இருவருமே அரசின் வரையறைக்கு மேல் மரங்களை வெட்ட அனுமதித்ததுதான்! அதிக மரங்களுள்ள வனப்பகுதிகளின் வனத்துறை அதிகாரிகளாகச் செல்வதற்குச் சென்ற ஆட்சியில் 25 லட்சம் ரூபாய் அளவுக்கு லஞ்சம் பெறப்பட்டிருக்கிறது என்பது நான் பொறுப்பேற்றதும் தெரிய வந்தது.

"அப்புறம் டேப்கோ... 72-ல் கலைஞர் ஆரம்பித்தது இது. சத்துணவில் முட்டை வழங்கப்பட வேண்டும் என்கிற நிலை வந்தபோது, மொத்தம் பத்து மாவட்டங்களில் டேப்கோ தான் சத்துணவு மையங்களுக்கு முட்டை சப்ளை செய்து கொண்டிருந்தது. 93-ல் ஜெயலலிதா என்ன செய்தார் தெரியுமா? இனி சத்துணவு மையங்களுக்கு டேப்கோ சப்ளை செய்யக்கூடாது என்று தமது கைப்படவே பைலில் எழுதியிருக்கிறார். விளைவு? தனியார் ஆறு பேருக்கு அந்தப் பொறுப்பு வழங்கப்பட்டது. அதுவும் அப்போது முட்டையின் நிர்ணய விலை 72 பைசா என்கிற நிலையில், அந்தத் தனியார்கள் 116 பைசாவுக்கு வழங்கினார்கள். இதனால் அரசுக்கு இரண்டு கோடி இழப்பு. இதையெல்லாம் நான் தடுத்து நிறுத்தியிருக்கிறேன். இது வரை நஷ்டத்தில் இயங்கிக் கொண்டிருந்த டேப்கோவை கடந்த மூன்று மாதங்களிலேயே நான்கு லட்ச ரூபாய் லாபம் சம்பாதிக்கச் செய்திருக்கிறேன். மொத்தத்தில் பார்க்கப் போனால், கலைஞரின் நூறு நாள் ஆட்சியில் என் பங்காக நூறு கோடி ரூபாய் அளவுக்கு அரசுக்கு வருமானம் வர நடவடிக்கை எடுத்திருக்கிறேன்!" என்ற அமைச்சரிடம், சென்ற இதழில் நாம் எழுதியிருந்த கட்டுரையில் சென்னை நகரத்திலுள்ள கறவை மாடுகளுக்கு ஆக்ஸிடோசின் ஊசி போட்டுப் பால் கறப்பது பற்றிய விஷயத்தைச் சொன்னோம்.

உடனடியாக கால்நடை மருத்துவப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தரோடு அது பற்றி டெலிபோனில் பேசினார். அந்த ஊசி போடப்படுவதாலும் 'மால்ட்' என்று சொல்லப்படும் சாராய ஆலைகளின் கழிவுகளை மாடுகளுக்குத் தீவனமாகக் கொடுப்பதாலும் மாடுகளுக்கு என்னென்ன கெடுதல்கள்? அதனால் கறக்கப்படும் பாலிலும் விஷத்தன்மை இருக்குமா? என்றெல்லாம் அவரிடம் கேட்டார்.

இவை பற்றியெல்லாம் இதுவரை எந்தவிதமான ஆராய்ச்சிகளும் செய்யப்பட்டதில்லை என்று அவர் சொன்னபோது, "இனிமேல் செய்யுங்கள். சில ஆராய்ச்சி மாணவர்களை இதிலேயே ஆய்வு செய்யச் சொல்லி பிஎச்.டி. பட்டம் வழங்கலாமே!" என்று யோசனையும் கூறினார்.

கடைசியாகச் சென்னை நகரின் பல இடங்களில், அருகிலுள்ள மரங்கள் விளம்பரப் பலகைகளை மறைக்கின்றன என்கிற காரணத்துக்காகவே சம்பந்தப்பட்ட மரங்கள் வெட்டப்படுவதை நாம் சுட்டிக்காட்டியபோது, அது பற்றியும் தாம் நடவடிக்கை எடுப்பதாக வாக்குத் தந்தார் அமைச்சர்.

**— இளங்கோவன், ஸ்ரீநிவாசன்**

வண்ணப்படங்கள் : **பேஜர் கே. மூர்த்தி**

# மாகரீனா மோகம்!






பலவற்றில் புயல் வேகத்தில் பரவி வருகிறது. ரொம்ப சிம்பிள் :

1. வலது கை நீட்டு.
2. இடது கை நீட்டு.
3. வலதுகையால் இடது தோள் தொடு.
4. இடது கரத்தை வலது கை மீது வை.
5. வலக்கரத்தால் காது பொத்து.
6. இடக்கரத்தாலும் காது பொத்து.
7. வலக்கரத்தைப் பின்பக்கம் வை.
8. இடக்கரத்தையும் பின்பக்கம் வை.
9. மூன்று முறை பின்புறத்தை அசை.
10. இடதுபுறம் துள்ளிக் குதி.




நடனம் என்றாலே இன்று மாகரீனாதான். இந்த லேட்டஸ்ட் நளின நடனம் உலக நாடுகள் மறுபடி நெ.1 லிருந்து தொடங்கு. பிரபுதேவா என்ன சொல்கிறார். ரெடியா?









1996 செப்டெம்பர் 1
தாது ஆவணி 16
மலர் : 55
இதழ் : 5


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## கிழிந்த பக்கங்கள்; தொலைந்த நியாயங்கள்!

இரண்டு பயங்கர சம்பவங்கள் சென்ற வாரத்தில் சென்னையைக் கலக்கின. முதல் சம்பவம், வேப்பேரி பகுதியில் நடந்தது. ஒரு கிறிஸ்துவப் பள்ளியின் பஸ்ஸில் குண்டுகள் வெடித்துச் சேதம் ஏற்பட்டது. சம்பவம் அதிகாலை இரண்டு மணிக்கு நடந்ததால் உயிர்ச் சேதம் ஏதும் இல்லை என்றாலும், நிகழ்ச்சி மிகுந்த வேதனையையும் கவலையையும் அளிப்ப தாகும். 'தமிழ் தீவிரவாத கூட்டத்தின் கைவண்ணம் இது' என்பதாகத் தெரியவந்துள்ளது.

காரணம் எதுவாயினும் கோபம் எப்படிப்பட்டதாயினும் பிரச்னையில் சம்பந்தப்படாத குழந்தை களைத் தாக்குதலுக்கு இலக்காக்குவது மிகப் பெரிய கொடூரம். குழந்தைகள் பயணிக்கும் நேரத்தில் குண்டு வெடித்திருந்தால் நேர்ந்திருக்கக்கூடிய கோரத்தை நினைத்தாலே குலை நடுங்குகிறது.

இந்தச் சம்பவத்தின் பின்னணியிலிருப்பவர்களை உடனடியாக வேட்டையாடிப் பிடித்து தண்டிப்பதன் மூலம், இதுபோன்ற தீவிரவாதம் கடுமையாக ஒடுக்கப்படும் என்பது நிரூபிக்கப்பட் டாக வேண்டும். இல்லையேல் மூலைக்கு மூலை குண்டு வெடிப்பு நிகழ்ந்து கொண்டே யிருக்கும்.

வெடிகுண்டு ராஜ்ஜியத்தைப் போல் குண்டர்கள் ராஜ்ஜியமும் இங்கே விமரிசையாக




நடந்து கொண்டிருக்கிறது. தமிழக அரசின் முன்னாள் தலைமைச் செயலர் டி.வி. வெங்கட் ராமன் பேரில் நடந்த தாக்குதல்கள் இதற்கு சாட்சி.

முதல்வர், உளவுத் துறையையும் காவல் துறையையும் முடுக்கிவிட்டு, இத்தகைய சம்பவங்கள் மீண்டும் நிகழாமல் உடனடியாகப் பாதுகாப்பு நடவடிக்கை எடுக்க வேண்டும்.

சம்பவத்தைக் குறித்து சட்டசபையில் தாமே அறிவித்து, வருத்தம் தெரிவித்ததன் மூலம், கடந்த கால அ.தி.மு.க.ஆட்சியினின்று அவர் தம்மை வேறுபடுத்திக் காட்டிக் கொண்டிருக்கிறார்.

இது சற்றே ஆறுதலான விஷயமெனில் இந்தத் தாக்குதல் சம்பவத்தின் பின்னணி குறித்து சட்டசபையில் முதல்வர் வெளியிட்டிருக்கும் தகவல்கள் பேரதிர்ச்சியை ஏற்படுத்தியிருக்கின்றன.

கடந்த ஆட்சியில் நடைபெற்ற நிலக்கரி இறக்குமதி ஊழல் குறித்துப் பராபரியான பேச்சு இதுவரை அடிபட்டு வந்தது. அது தொடர்பாக அரசுடன் ஏற்பட்ட கருத்து வேறுபாடு காரணமாகவே ஐ.ஏ.எஸ். அதிகாரி சுந்தரம் ராஜினாமா செய்தார் என்பது தெரிந்ததே.

மட்ட ரக நிலக்கரியை அநியாய விலைக்கு இறக்குமதி செய்வது தவறு என்றும், மத்திய அரசு இந்த இறக்குமதியை மேற்கொள்ள வேண்டாம் என எச்சரித்திருப்பதையும் பொதுப்பணித் துறைச் செயலர் என்கிற தகுதியில் சுட்டிக்காட்டிய சுந்தரம், அழுத்தந்திருத்தமாகத் தமது கருத்தைப் பதிவு செய்திருக்கிறார் :

'இந்தக் கரியை நாம் இறக்குமதி செய்தால் சர்ச்சை எழும், அரசுக்கு அவப்பெயர் உண்டாகும்' என்பது அவர் கைப்பட கோப்பில் எழுதிய எச்சரிக்கை.

சுந்தரத்தின் ஒத்துழைப்பு கிடைக்காது போகவே, ஜெ. அரசு தந்திரமாகச் செயல்பட்டு, மின்வாரியத்தையே பொதுப்பணித் துறையின் கட்டுப்பாட்டிலிருந்து நீக்கிவிட்டது! மின்சக்தி




(எனர்ஜி) துறை என்பதாக ஒன்றைப் புதிதாக உருவாக்கியது. நிலக்கரி இறக்குமதியை இதுநாள்வரை கவனித்து வந்த பொதுப்பணித் துறைச் செயலரின் கருத்து, உறையிலிட்டு ஒட்டிய பிறகு, புதிய மின்சக்தி துறைச் செயலருக்கு, சம்பந்தப்பட்ட கோப்புகளுடன் அனுப்பப் பட்டது. அவ்வாறு அனுப்பி வைத்தவர், அப்போதைய தலைமைச் செயலர் டி.வி. வெங்கட் ராமன்தான்.

புதிய மின்சக்தி துறைச் செயலர் முத்துசாமி, நிலக்கரி இறக்குமதி கோப்பின் பல பக்கங்கள் கிழித்தெடுக்கப்பட்டிருப்பதைக் கவனித்துக் குறித்ததோடு, அந்த இறக்குமதியை எதிர்த்துத் தாமும் கருத்து கூறியிருக்கிறார்.

அவர் கருத்தையும் ஓரங்கட்டிவிட்டுக் காரியம் செய்திருக்கிறது அ.தி.மு.க. ஆட்சி!

சட்டசபையில் முதல்வர் கருணாநிதி அறிவித்திருப்பதுபோல், சம்பந்தப்பட்ட கோப்பின் எஞ்சியுள்ள பக்கங்களே பெரிய அக்கிரமம் நடந்துள்ளதற்குப் போதுமான சாட்சியம்தான்.

அ.தி.மு.க. ஆட்சியின் ஊழல்கள் ஒவ்வொன்றாக வெளிப்பட, வெளிப்பட, இனி எந்த புதிய ஊழல் செய்தியும் பெரிய அதிர்ச்சி தந்துவிடாது என்கிற மனநிலைக்குத் தள்ளப்பட்டிருந் தோம்.

ஆனால், இந்த நிலக்கரி இறக்குமதி விவகாரத்தில், அதிகாரிகள் எடுத்துச் சொல்லியும் கேளாமல், வீம்புடனும் பணவெறியுடனும் ஜெ. அரசு செயல்பட்டிருப்பதைப் பார்க்க, அதிர்ச்சி யில் ஸ்தம்பித்துப் போய் நிற்கிறோம்.

கைப்புண்ணுக்குக் கண்ணாடி தேவையில்லை என்பதுபோல், ஜெ.வுக்கு எதிரான வழக்கு களில் இதற்கு மேலும் ஆவணங்களோ சாட்சிகளோ தேவையில்லை. சட்டம் சுறுசுறுப்பாக இயங்கி தண்டனைகளைப் பெற்றுத்தர வேண்டும். மிகவும் காலதாமதமாய் நீதித்துறை செயல் படுமானால், அது நீதியே கிடைக்காமல் போவதற்கு ஒப்பாகும்.

# தண்ணீர்

நாளையிலிருந்து வேலைக்குப் போகப் போகிறோம் என்பதில் கொஞ்சம் பெருமையாகவும் கொஞ்சம் படபடப்பாகவும் இருந்தது சிந்துவுக்கு.

"சிந்து, ஒரு க்ளாஸ் தண்ணி கொடேன்" அண்ணன் ரமணனின் செல்லக் கட்டளை. எழுந்தாள். "அப்படியே எனக்கும் வெந்நீர் கொண்டு வாம்மா. மாத்திரை போட்டுக்கணும்" என்றார் அப்பா.

சிந்துவுக்கு அலுப்பாக இருந்தது. 'அதெப்படி இந்தத் தண்ணீர் விஷயம் எப்பொழுதும் தன் தலையிலேயே விழுகிறது?'

சாப்பிடுவதற்காக தட்டுக்களை வைப்பது தங்கை ராதாவென்றால், சொம்பு, தம்ளர்களில் தண்ணீரை நிரப்பி வைப்பது சிந்துவின் கடமை.

அம்மா தினமும் மதிய டிபன் பொட்டலங்களைக் கட்டி விடுவாளென்றாலும் எல்லோருக்கும் தண்ணீர் நிரப்பி வைப்பது சிந்துவின் பொறுப்பு. அப்பாவுக்கு வெதுவெதுவென்னீர், வேலைக்குப் போகும் ரமணனுக்கு சின்ன வாட்டர் கூலரில் ஜில் நீர், சைனஸ் தொந்தரவுள்ள ராதாவுக்கு வெறும் 'நீர்' - இப்படிப் பார்த்துப் பார்த்துப் பங்கீடு செய்ய வேண்டும். முணுமுணுக்கக் கூட முடியாது. ("வீட்டுலேதானே இருக்கே. செய்தா என்ன தேய்ஞ்சா போயிடுவே?").

போதாக்குறைக்கு நான்கு குடித்தனங்களுக்குமாக உள்ள பொதுக்குழாயிலிருந்து தண்ணீர் பிடித்துக் கொண்டு வருவதும் அவள் ட்யூட்டிதான். வீட்டு நிலவரத்துக்கேற்றபடி சமையலறைக்கு இவ்வளவு குடம், குளியலறைக்கு இவ்வளவு வாளி என்று தினசரி தேவைகளை அறிந்து செயல்பட வேண்டும்.

ஏனோ இந்தத் தண்ணீர்ப் பங்கீடு விவகாரம் அவள் மனத்தில் ஓர் எதிர்மறை அப்செஷனாகவே மாறி, தன் வீட்டு வாசலில் ஒரு பிரம்மாண்டமான தண்ணீர்ப் பந்தல் வைக்கப்படுவதாகவும், ''சும்மாத்தானே இருக்கே. இதை கவனிச்சுக்கோ'' என்று அந்தப் 'பந்தலு'க்கான பொறுப்பு தன் தலையில் கட்டப்படுவதாகவும் கூட அவளுக்குக் கனவுகள் வரத் தொடங்கி விட்டன!

எப்படியோ, அவளது பிரச்னைக்கு நாளையிலிருந்து தீர்வு. "ராதா, இனிமே சிந்து வேலைக்குப் போறதினாலே, இதையெல்லாம் நீதான் கவனிச்சுக்கணும்'' என்று ஒற்றை

---

# மன்னிப்பு

''நான் ஒண்ணு சொல்லுவேன்... கோவிச்சுக்கக் கூடாது....''

-ஜானகி இப்படி மல்லிகைப்பூ மணக்க பக்கத்தில் உட்கார்ந்து பேசினால் கோபிக்கவா முடியும்?

''என்ன....? இந்த மாசம் கிரெடிட் கார்ட் பில் எக்கச்சக்கமா...?'' - இரக்கத்தைப் பின்னுக்குத்தள்ளி குரலில் கடுமை வரவழைக்க முயன்றான்.

''ஐயோ! அதெல்லாம் இல்லை...''

''பின்னே....?''

''இந்த முறையும் என்னால பரீட்சை எழுத முடியாது...''

''ஏன்...?'' - இரக்கம் அடியோடு வடிந்து போக, சந்துரு கடுப்புடன் கேட்டான்.



சந்துரு எம்.பி.ஏ. Weds ஜானகி பிளஸ் டூ என்று பத்திரிகை அடிக்க முடியாததால் பட்டங்களின்றி அச்சானது அவர்கள் திருமண அழைப்பு. மிஸஸ் ஜானகி சந்துருவாவது பட்டதாரியாக வேண்டும் என்பது அவன் எடுத்த முடிவு.

பொரியலுக்குச் 'சேப்பங்கிழங்கா? உருளைக்கிழங்கா? அன்னம்மாவுக்கு நூறு ரூபாய் அட்வான்ஸ் கொடுக்கலாமா? என்றெல்லாம் அனுமதி கோருபவள் இந்த விஷ

வாக்கியத்தில் சிந்துவின் பொறுப்புகளுக்கு மாற்றல் உத்தரவு அளித்து விட்டாள் அம்மா.

**ம**றுநாள்.

"நர்மதா கிளினிக்" சிந்துவை வரவேற்றது. புடைவையிலிருந்து சீருடைக்கு மாறினாள். சந்தோஷத்தில் புன்னகை பிறந்தது.

''என்னம்மா ரொம்ப சந்தோஷமா வேலையைத் தொடங்கற போலிருக்கே? குட். இப்படித்தான் சிரித்த முகத்தோட இருக்கணும்'' என்ற அந்த க்ளினிக்கின் தலைமை டாக்டரான ரங்கராஜ் அவள் செய்ய வேண்டிய வேலை

# பங்கீடு

களைப் பட்டியலிட்டார்.

"எட்டாம் நம்பர் ரூம் பேஷண்ட்டுக்கு ரெண்டு பாட்டில் 'ட்ரிப்ஸ்' ஏத்தணும். தீவிர சிகிச்சைப் பிரிவுக்கு இன்னைக்குப் பத்து பாட்டில்கள் தேவைப்படும். ஜெனரல் வார்டிலே அட்மிட் ஆகியிருக்கிற ஆர்த்தின்ற லேடிக்கு டிரிப்ஸ் ஏத்திக்கிட்டிருக்காங்க. பத்து நிமிஷத்திலே ஃப்ரெஷ் பாட்டில் அவங்களுக்கு வேண்டியிருக்கும். இதையெல்லாம் நான் சொன்னபடி பிரித்துக் கொடுத்துட்டு வந்தா, உன் மத்த ரொட்டீனை விளக்கறேன்."



ஒரு பெரிய பெட்டியில் அடுக்கப்பட்டிருந்த அந்த க்ளுக்கோஸ் தண்ணீர் பாட்டில்கள் சிந்துவின் விநியோகத்துக்காகத் தயாராகக் காத்திருந்தன!

அருண்சரண்யா

---

யத்தில் மட்டும் எப்படியோ ஏமாற்றி வருகிறாள். அதுவும் தபால் மூலம் இரண்டு வருட பி.ஏ. எகனாமிக்ஸ் முடித்து, மூன்றாமாண்டில் ஒரே ஒரு குரூப் மிச்சமுள்ள நிலையில்....

இதில் 'நான் ஒண்ணு சொல்லுவேன்... கோபிச்சுக்கக் கூடாது...' என்று முன் ஜாமீன் வேறு!

நன்றாகப் படிக்கக் கூடியவள் இப்படி இல்லறச் சடங்குகளில் மட்டுமே உழல்வானேன் என்பது அவன் ஆதங்கம்.

''இதப்பாரு ஜானு... இதோட எங்கிட்டே இதே விஷயத்துக்கு மூணு முறை வாய்தா வாங்கிட்டே. எல்லாம் நொண்டிச் சாக்கு...''

''எது நொண்டிச் சாக்கு? உங்க அப்பாவுக்குக் காட்டராக்ட் ஆபரேஷன், எங்க அண்ணா கல்யாணம், உங்க தம்பி சீமந்தம்... இப்ப தாத்தாவுக்கு ஆபரேஷன்.... இதுக்கெல்லாம் என் பரீட்சை சௌகரியம் பார்த்தா தேதி குறிச்சாங்க....?''

''ஆமாம்! உன்னை யாரு பைத்தியக்காரி மாதிரி இழுத்துப் போட்டுக்கிட்டுக் காரியம் செய்யச் சொன்னது....? நான் பாரு.... கணக்கா இரண்டு நாள் லீவ் போட்டு அதோட கத்திரிச்சிக்கறேன். முதல்ல டைம் மானேஜ்மெண்ட் கத்துக்கோ...''

''ஆகா! இனிமே கத்துக்கணும் டைம் மானேஜ்மெண்ட்! உங்க வீடோ, எங்க வீடோ நல்லது கெட்டதுக்கு உங்க பொறுப்பையும் சேர்த்து நான் சுமக்கறதுனாலதான் நீங்க இரண்டு நாள் லீவோட நிறுத்திக்க முடியுது மிஸ்டர் எம்.பி.ஏ...''

''..............''

''என்ன பதிலைக் காணும்? நீங்க நேரத்தை மட்டும்தான் மானேஜ் பண்றீங்க. நான் இந்த வீட்லே அரை டஜன் பேரோட, என் நேரத்தையும் சேர்த்து மேய்ச்சுக் கட்டறேன். அரை டஜன்ங்கறது ஏழாயிடக் கூடாதேன்னு வேற தனியா திட்டமிட வேண்டியிருக்கு...''

சொல்லும்போதே குரலுடைந்து போனாலும் முகத்தில் கோபம் மூக்குத்தியோடு போட்டி போட்டுப் பளபளத்தது.

கோபத்திலும் எத்தனை அழகு....? - அதைச் சொன்னால் இன்னும் கோபம் வருமோ....? இப்போது சந்துரு முன் ஜாமீன் வாங்க முயன்றான்.

''ஜானு... நான் ஒண்ணு சொன்னா கோவிச்சுக்க மாட்டியே...''

''நீங்க ஒண்ணும் சொல்ல வேண்டாம்....'' அவன் நெஞ்சில் சரிந்து கொண்டாள்.

அலமேலு கணேசன்

# தொடரட்டும் ரெய்டு!

✉ தலையங்கம் கண்டேன். அரசியல் சுயநலத்திற்காகக் கலைஞர் காவிரி நீர் தாவாவில் 'பாலுக்கும் காவல்; பூனைக்கும் தோழன்' பாணியில் நடவாமல் நக்கீர உணர்வோடு செயல்படுவாரென நம்புவோம்! 'பேரு பெத்த பேரு..தாக நீரு லேது!' என்று ஆகிவிடக் கூடாது!
இனாம் மணியாச்சி, ச.ஆ. கேசவன்.

✉ உணவுத் துறை அமைச்சருடன் தாங்கள் சேர்ந்து நடத்திய 'ரெய்டு' படிக்க சுவாரஸ்யமாக இருந்த அதே வேளையில் பொதுமக்களுக்குப் போக வேண்டிய பொருட்கள் ஆங்காங்கே அதிகாரிகள் மூலம் வேறு வழிகளில் போய்க் கொண்டிருப்பதைக் காணும்போது வேதனையே! இந்த அமைச்சர்களுடன் கல்கியின் 'ரெய்டு' பணி தொடரட்டும்!
செம்பட்டி, வி.எஸ். இராமு.

✉ கல்கி, நான் பெரிதும் மதிக்கும் ஏடு. அதில் என் பேச்சில் வர வர பண்பு நலன் குறைகிறது என்று பதில் வந்துள்ளது. (4.8.96 இதழ்)
பழசெல்லாம் இருக்கட்டும்; சமீப நிகழ்ச்சி பார்ப்போம். இளையபூசி கட்டடத்தைத் தமாகா பிடித்துக் கொண்டது. அனைத்துப் பத்திரிகைகளிலும் அவ்வாறே செய்தி வந்தது. ஆனால் மதிப்பிற்குரிய மூப்பனார் தமாகா. சம்பந்தப்படவில்லை என்று கூறுகிறார். அப்படியானால் இத்தனை ஏடுகளும் பொய்யர்கள். அவர் சொல்வது மட்டும் மெய்! அப்படித்தானே?
கலைஞருக்குத் தெரியாதா? தெரியும். ஆனாலும் நடவடிக்கை இல்லை! ஏன்? நட்புக் கட்சி!
இதேதானே முன்பு நடந்தது. சசிகலா எதைச் செய்தாலும் சரி என்பதுதானே ஜெயலலிதாவின் வழக்கமாக இருந்தது?
நட்பின் காரணமாகக்கூட சத்தியம் தவறக் கூடாது என்பதுதான் என் ஆதங்கம்.
சென்னை-33, குமரி அனந்தன், (தமிழ்நாடு இகாங்கிரஸ் தலைவர்)

✉ அமைச்சர் கே.என்.நேரு, உதவி மானேஜர் புவனேந்திரனுக்கு எச்சரிக்கை விடும்போது, மானேஜர் பிரேமானந்தா ஸ்டைலில் புன்னகை புரிவது நியாயமா? 'இடுக்கண் வருங்கால் நகுக' என்பதன் விளக்கம் இதுதானோ?
திருச்சி, உஷா முத்துராமன்.

✉ சுஜாதா பக்கம் சிந்தனையைத் தூண்டுவதாக இருந்தது. "எப்போது இந்த எண்ணிக்கை ஒற்றை இலக்கமாகும் மிஸ்டர் சிதம்பரம்?" என்று கேட்டிருக்கிறார். இத்தகைய கேள்விகளை இடையறாது எழுப்புபவரின் எண்ணிக்கை இந்த ஏழை நாட்டில் பல்லாயிரக்கணக்காகப் பெருகும் பொழுது. தனது சுதந்திரத்தை எவருக்கும் அடகு வைக்காமல் வியட்நாம் போல் இந்தியாவும் ஒரு சுயாதீன அரசியல், பொருளாதார, விஞ்ஞான கலாசாரக் கொள்கையை உறுதியாகப் பின்பற்றும்போது!
திருநெல்வேலி, தி.க.சி.

✉ சுதந்தர தின குவிஸ் புதுமையாகவும் அருமையாகவும் இருந்தது. ஆனால் கடைசி கேள்வியும் விடையும் தவறு! நேரு இருந்த வரை வெளியுறவுத் துறை அமைச்சராக இருந்தவர் அவர்தான் - கிருஷ்ண மேனன் அல்ல!
சென்னை -4, அய்யாசாமி.

✉ 'ஐம்பதாவது சுதந்தர தினம் கொண்டாடும் இந்தப் பொன் விழா ஆண்டில் பெய்யின் வெண்கலம் நமக்கு தங்கத்துக்கு சமானம்' - ஒரு வாசகம் சொன்னாலும், திருவாசகம் போல் இருந்தது உமது கருத்து!
திருநெல்வேலி-8, கே.எ. பாலமுருகன்.

✉ பஸ் பாஸ் கொடுத்ததும், கூடவே, போட்டோ போஸ் கொடுத்த கலைஞருக்கு செம்பியன் கொடுத்த "நறுக்" தேவைதான்.
கடலூர்-2, கோ. இந்தியத்தமிழன்.

✉ மூக்கைப் பாதுகாக்கப் பல பயனுள்ள வழிகள் சொன்ன 'ஹலோ! சுகமா' நன்றாக இருந்தது. முந்திரிக்கொட்டை மாதிரி அடுத்தவர் விஷயத்தில் மூக்கை நுழைப்பவர்கள் இனி தம் மூக்கை நல்ல முறையில் கவனிப்பார்களாக!
சென்னை-33, சுப்பராயர்புரம் சுபன்.

## ரூ.20/- பரிசுக் கடிதம்

✉ மும்பையைக் கலக்கும் 'பார்' ஆடும் பெண்கள் கட்டுரையைப் படித்தேன். பணம் ஒன்றிற்காக மட்டுமே பல பேர் முன்னிலையிலே இந்தப் பெண்கள் ஆட விரும்புகிறார்களே என்பதை நினைக்கும் போது வேதனைப்படாமல் இருக்க முடியவில்லை!
திருச்சி-6, எம். கதிஜா ஹனீபா.

✉ 'தமிழ்ச்செல்வன்' பட விமர்சனத்தில் பாராட்ட வேண்டிய அம்சங்களைப் பாராட்டி, "பாரதிராஜா இன்னும் திறம்பட யோசிக்கக் கூடியவர்" என்று குட்ட வேண்டிய பகுதிகளை நாசூக்காக, ஆக்கபூர்வமாக விமர்சித்திருந்தீர்கள். உண்மையில் இந்தப் படம் கடந்த ஐந்து ஆண்டு கால ஆட்சியின் 'டாகுமெண்டரி'!
திருச்சி-2, பி. ஸ்ரீராம்.

# உங்களை வெற்றியின் சிகரத்திற்கு கொண்டு செல்வோம்






*MUDRA* - சூசி - 'லாஞ்சி' என்றும் 'ஊசி' ஒன்று வெளிக்காட்டி வெற்றியின் சிகரத்தில் இருப்பதைக் குறிக்கின்றது

எல்ஜி பைனான்ஸின் சேவை, 75 வருட அனுபவமும், ரூ.700 கோடி மதிப்பும் கொண்ட எல்ஜி குழுமத்தின் பாரம்பரியத்துடன் இணைந்து வருகிறது.

இணைந்திடுவீர் எம்மோடு, வளர்ந்திடுவோம் வளமோடு.

## ELGI FINANCE

எல்ஜி பைனான்ஸ் லிமிடெட்

கார்பொரேட் அலுவலகம்

4-வது மாடி, JVL பிளாஸா, 501, மவுண்ட் ரோடு,
தேனாம்பேட்டை, சென்னை - 600 018.
போன் : (044) 4345445, 4348896, 4348897.

**உங்க நம்பிக்கையே எங்க நற்பெயர்**

தலைமை அலுவலகம்: எல்ஜி ஹவுஸ், திருச்சி ரோடு, கோயமுத்தூர் 641 045 ☎ (0422) 216132, 214571

● FIXED DEPOSITS ● HIRE PURCHASE ●LEASING ● BILL DISCOUNTING ● MERCHANT BANKING



# ப்ரியம்

ஒரு பக்கம் சாராய வியாபாரமும் கொலை, அடிதடி போன்ற கெட்ட காரியங்களும் பண்ணுகிற இரண்டு பெரிய மனிதர்கள், தொழிலில் செமை போட்டி, பொறாமை. மறு பக்கம் அவர்களுக்குத் தலா ஒரு பெண்ணும் பிள்ளையும் பிறந்து, இயற்கை விதிப்படி காதலிக்கிறார்கள். காதலென்றால் லேசுப்பட்ட காதல் இல்லை. ஒரு பைக்கில் ஒட்டிக் கொண்டு, உர்ராங் உர்ராங் என்று பறக்கிறார்கள், பறக்கிறார்கள், பறக்கிறார்கள்.... பறந்து கொண்டே இருக்கிறார்கள். (படம் முழுக்கப் பறந்தும் ஒரு சீனில் கூட பெட்ரோல் போடவில்லை!)

அப்பா வில்லன்களிடமிருந்து தப்பித்து அம்மாக்களின் ஆசியோடு அவர்கள் வீட்டை விட்டு வெளியேறி, வேறொரு நகரத்தில் குடியேற, (அங்கே வசதியாக ஒரு குழந்தை இல்லாத தம்பதி) அங்கே வில்லன் பணியை ரிலே முறையில் பெறுகிறான் ஒரு வாடகைக் கொலைகாரன். அவனுடன் போராட்டம், நடுவே கொஞ்சம் உல்லாசம் என்று இருந்து விட்டு, கிளைமாக்ஸில் உக்கிரமாகச் சண்டை போட்டு, வில்லனை ஒழித்து விட்டு ஜோடி ஒன்று சேருகிறது. சத்தியமாக இதுதான் கதை.

பத்து வருஷம் முந்தைய ஹிந்திப்பட சமன்பாடுதான். தேடி எடுத்து, புது டிரெஸ் மாட்டி உலவ விட்டிருக்கிறார்கள். உதவிக்கு வித்யாசாகர் இசையும் கணேஷ்ராமின் கேமராவும்.

காசர்கோடு கடற்கரைப் பகுதியைக் காட்டினாலும் சரி, தரமணி திரைப்பட நகரத்து வராண்டா செட்டைக் காட்டினாலும் சரி. கேமராவின் இயக்கம் இது வரை காணாத புதுமையாக இருக்கிறது. எத்தனையோ முறை பார்த்து அலுத்த லொக்கேஷன்களை மிக மாறுபட்ட கோணத்தில் புதுசு போலப் பார்க்க நேருகிற போது அன்னாரை இழுத்துப் பிடித்து பாராட்டத் தோன்றுகிறது.

அதே மாதிரி இசை. ஸ்ரீவள்ளி, சிவசுவி மாதிரி, பெரும்பாலும் படம் பாடல்களிலேயே நகர்ந்தாலும் மூன்று நான்கு பாடல்கள் சுலபமாகத் தேறி விடுகின்றன. குறிப்பாக ஹரிஹரன் வலிக்காமல் பாடுகிற அந்த உடையாத வெண்ணிலா.

முழுக் காதல் படத்தில் லாஜிக் போன்ற விஷயங்கள் பார்ப்பதில் நியாயமில்லை. பார்த்தால், பல காட்சிகளைப் பொறுத்துக் கொள்ள முடியாது.

படம் ஆரம்பித்த பதினைந்து, இருபதாவது நிமிஷத்தில் தொய்வு வந்துவிடும் போல ஒரு ஜவ்வுத் தன்மை எட்டிப் பார்க்கிறது. எழுந்து போனால் நஷ்டம் உங்களுக்குத்தான்.

பிரகாஷ் ராஜ் வந்ததும் பிடிக்கிற சூடு இருக்கிறது பாருங்கள்....

அந்தக் கண்ணும் கன்னமும் புருவமும் துடிக்கிற துடிப்பும் உதட்டுச் சுழிப்பும் படு அலட்சியமான அந்த ஸ்டைலும்...

எழுதி வைத்துக் கொள்ளுங்கள். தமிழ் நாட்டுக்கு இன்னொரு சூப்பர் ஸ்டாரைப் பார்க்கிற வாய்ப்பு உண்டென்றால் சந்தேகமில்லாமல் அது பிரகாஷ் ராஜ்தான்!

— ஆர். பி. ஆர்.

# கப்பலில் கர்நாடிக் மியூசிக்!

நார்வே நாட்டின் தலைநகரான ஆஸ்லோவில் கடந்த ஜூலை மாதம் சர்வதேச இசை விழா நடந்தது. இந்தியாவின் சார்பில் அதில் பங்கெடுத்துக் கொண்டவர்கள், லலிதா-நந்தினி சகோதரிகள், மட்டுமே. லலிதாவும் நந்தினியும் சொன்னார்கள்...

"சுமார் 300 நாடுகள் பங்கேற்ற ஆஸ்லோ சர்வதேச இசை விழாவில், எங்கள் வயலின் கச்சேரிதான் ஆரம்ப நிகழ்ச்சி. அதற்கு அடுத்த நாள் விழா மண்டபத்திலிருந்து நாங்கள் படி இறங்கி வந்து கொண்டிருந்தபோது, பின்னாலிருந்து, 'உங்கள் வயலின் கச்சேரி நேற்று ரொம்பப் பிரமாதமாக இருந்தது. ரசித்துக் கேட்டேன்!' என்று ஒரு குரல் வந்தது. பின்னால் திரும்பி, அவருக்கு 'தாங்க் யூ' சொன்னேன். ஓர் இந்தியர் நம்மிடம் நேரிடையாக வந்து பாராட்டுகிறாரே என்று சந்தோஷமாக இருந்தது. 'நான்தான் எஸ்.கே. மாத்தூர். இந்தியாவின் அம்பாஸிடர்' என்று அவர் சொன்னபோது திடுக்கிட்டுப் போனோம். முதலில் அவரது எளிமை எங்களை அசத்தியது என்றால், நேரே எங்களைப் பாராட்ட அவரே வந்திருக்கிறாரே என்ற ஆச்சரியமும் மகிழ்ச்சியும் வேறு!

"சற்று நேரத்தில், இசைவிழாவில் பங்கு கொண்ட அத்தனை நாட்டுப் பிரதிநிதிகளும் அவரவர் நாட்டு அட்டையை (ப்ளகார்டு) எடுத்துக் கொண்டு, ஒலிம்பிக்ஸ், ஏஷியன் கேம்ஸில் எல்லாம் வருகிற மாதிரி, ஊர்வலமாக வர வேண்டி இருந்தது. 'நல்லவேளை, இந்தியாவிலிருந்து நீங்களாவது வந்திருக்கிறீர்கள். நீங்கள்தான் 'ப்ளகார்'டை எடுத்துக் கொண்டு போக வேண்டும்' என்றார் மாத்தூர். ரொம்பவும் பெருமையாக இருந்தது.

"எங்கள் வயலின் இசை அந்த நாட்டு மக்களுக்கு மிகவும் பிடித்துப் போயிற்று. விழாவில் ஒரு நாள் ஆன்செம்பிள் எனப்படும் சேர்ந்திசையை நாங்கள்தான் நடத்த வேண்டும் என்று சொல்லி விட்டார்கள். பல நாடுகளிலிருந்தும் வந்திருக்கும் இசைக் கலைஞர்களை எப்படிப் பழக்குவது? பயமாகத்தான்



இருந்தது. நார்வே, நாட்டு வயலினை ஹார் டங்கர் ஃபிடில் என்கிறார்கள். மோர்சிங் மாதிரி இன்னொரு வாத்தியம். டிரம்ஸ், பியானோ, கிடார் எல்லாம் அந்தக் குழுவில் இருந்தன. கணபதி சச்சிதானந்த சுவாமிகளின் 'ஜெய ஜெய கணபதி' என்கிற கல்யாண ராகப் பாட்டை வாசித்துக் காண்பித்தோம். 'விநாய கர்தான் நாங்கள் முதலில் வணங்குகிற தெய்வம்; ஹி ஈஸ் த ரிமூவர் அஃப் அல் த அப்ஸ்டகிள்ஸ்' என்று சொன்னபோது, அவர் களுக்கு ஒரே சந்தோஷம். மூன்று நாட்கள் தினமும் நேரம் ஒதுக்கிக் கொண்டு எங்கள் இருப்பிடத்துக்கு வந்தார்கள்; கர்ம சிரத்தை யாக பிராக்டிக்ஸ் செய்தார்கள். விழாவில் அதை ஆன்செம்பின் (குழுவாக) வாசித்த போது அப்படி ஒரு பாராட்டு!

"கடைசி நாளன்று கப்பலிலேயே கச்சேரி. ஒவ்வொரு 'போர்ட்'டிலும் மக்கள் ஏறுவார் கள், இறங்குவார்கள். அது தவிர இந்த விழா வுக்கு வந்திருந்த இசைக் கலைஞர்கள் எல் லாம் பாடவும் வாசிக்கவும் செய்யும்போது, கேட்பதற்கென்றே நிறைய ரசிகர்கள் அந்த ஆறு மணி நேரப் பயணத்துக்கு வந்திருந்தார் கள். கப்பலை ஸ்டார்ட் செய்யும்போது இசை இருக்காது. கப்பல் நகரத் தொடங்கியவுடன் இசை ஆரம்பமாகும். நாங்கள் வாசிக்கத் தொடங்கி, வாசித்து முடித்ததும் கப்பலை மறுபடி கிளப்ப வேண்டும். கப்பலின் காப் டன் கிளப்பவே இல்லை! அவர், 'இத்தனை பேர் வாசித்தும் மயங்காத நான் உங்கள் வய லின் வாசிப்பில் சொக்கிப் போய்விட்டேன். ஐ ஆம் ஸோ மச் ஃபாஸினேடட்!' என்று பாராட்டி விட்டு மேல்தளத்துக்கு எங்களை அழைத்துப் போய் கடல் பரப்பைக் காண் பித்து விட்டு, அவரது காபினுக்கு அழைத்துப் போய் மறுபடி பாராட்டினார். நாங்கள் அந் தக் கப்பல் கச்சேரியில் கடைசியில் வாசித் தது திருப்புகழ்!

"நந்தினிக்கு அன்று பிறந்த நாள் என்று தெரிந்து கொண்டு, கப்பலில் வந்த அத்தனை இசைக் குழுக்களும், சேர்ந்து 'ஹாப்பி பர்த்டே' வாசித்தது மறக்க முடியாத அனுபவம். ரொம்ப டச்சிங்காக இருந்தது."

- சாருகேசி



• வனிதா நந்தினி



"எலியைக் கண்டால் கை, கால் நக மெல்லாம் தன்னால நீண்டுக்குது டாக் டர்...?"

"பூனைப் படையில ரொம்ப நாள் வேலை பார்த்தால் அப்படித்தான் இருக் கும்!"

– சீர்காழி வி. ரேவதி.



"உங்களுக்கு ரொம்ப ரொம்ப நன்றிங்க!"

"எதுக்கு?"

"ரொம்ப நாளா சிரிக்காம இருந்த எங்க பையனை 'இன்னிக்கு நான் ஊருக்குக் கிளம்பறேன்'னு ஜோக்கடிச்சு சிரிக்க வெச்சதுக்குத்தான்!"

-பம்பாய் முத்துமணாளன்.



"உன் அப்பாகிட்டே நம்ம காதலைப் பத்தி சொன்னியா?"

"சொன்னேன்."

"அப்படியா! என்ன சொன்னார்?"

"என் கல்யாணப் பத்திரிகையை உங்களுக்கும் ஒன்னு குடுக்கச் சொன்னார்!"

–வெ. ராஜாராமன்.

# வளர்ப்பு மகன் கல்யாண

"தண்டபாணி, உன்னைக் கொசுக்கள் குடியிருக்கற ஜெயில்ல விட்டு, கையில ஒரு பகவத்கீதை குடுக்கணும் போல ஆத்திரம் வருதுடா!" என்றேன் பல்லைக் கடித்தபடி.

"ரொம்பக் கோவமா இருக்கேன்னு தெரியுது. உன் காசுல ஒரு கோக் சாப்பிடலாம் வா. சரியாயிடும்!" என்றான்.

"போன வாரத்துக்குப் போன வாரம் என்ன சொன்னே? யாரோ நிவேதிதான்னு ஒரு பெங்களூர் புஷ்பம் அர்ஜுன் படத்துல நடிக்குது; அடுத்த வாரம் போட்டோ தரேன், அப்படி இப்படின்னு ஊளப்பி விட்டுட்டு, நீ பாட்டுக்கு போன வாரம் டபாய்ச்சுட்டே. நானும் கேக்க மறந்துட்டேன். எழுதித் தொலைச்சுட்டதால ரீடர்ஸெல்லாம் போட்டு வாட்டிட்டாங்க வாட்டி."

"சே, இதானா? நான் ஏதோ மூணரை கோடி பதுக்கியிருக்கராப்பல பாயறியே? விடு. ஸ்டில் மட்டுமில்லை, அதை விட சூப்பர் நியூஸ் தரேன் கேட்டுக்கோ. 'தாயின் மணிக்கொடி' ஷூட்டிங் எங்க நடக்குது தெரியுமா? தாய் நாட்டைத் தாண்டி, கப்பல் ஏறி கனடா போய் டொரண்டோவுல எடுக்கறாங்க!"

"அப்படிப் போடு!"

"இன்னொரு விஷயம் கேள். அங்க லொக்கேஷன் பார்க்க அர்ஜுன் போயிருந்தப்ப, ஏதோ ஒரு ஆத்தங்கரையில, பச்சை குத்தற தொழிலாளிங்களை சந்திச்சிருக்கார்."

"கனடா நாட்டுக் கிழவிகளா?"

"குமரியா கூட இருக்கலாம். சரியா தெரியலை. முழுக்கக் கேளு. நம்ம ஊர்ல சாதாரணமா பச்சை குத்தினா, பச்சையாத்தானே இருக்கும்? அங்க என்ன கலர் வேணும்னாலும் குத்திக்கலாம்."

"அர்ஜுன் குத்திட்டாரா?"

"பின்னே? தேசியக் கொடி! மூணு கலர்ல ஜோரா குத்திட்டு, முழங்கைல செப்டிக் ஆகி, இப்ப மருந்து போட்டுட்டு இருக்கார். சரியானதும் கொடி, பட்டொளிவீசிப் பறக்குமாம்."

"அட!"

"தேசபக்திப் படமா எடுக்கறேன்! அதெல்



• தாயின் மணிக்கொடி : அர்ஜுன், நிவேதிதா

# போல் ஒரு விழா!

லாம் வெறும் வியாபாரமா இருக்கலாம்; ஆனா எனக்குள்ள நிஜமாவே தேசபக்தி உண்டு. அதை வெளிக்காட்ட இது ஒரு சின்ன சந்தர்ப்பம் அப்படீன்னார்."

"புல்லரிக்குது தண்டபாணி!"

"இருக்கட்டும். இந்த நியூஸ் கேளு. ஹார்ட் அட்டாக் வந்துடும். ஹுஸைனி இருக்காரில்லை....?"

"அடிக்கடி மேடையில ஸ்டன்ட் காட்சிகள் காட்டுவாரே?"

"ஆமா. அவர்தான். மேடை போரடிச்சி, சினிமாவுக்கு வந்திருக்கார். 'சிற்பி'ன்னு படம் பேரு."

"அட, சிற்பக்கலை தெரியுமாமா? கையால கல்லை உடைச்சே சிற்பமாக்கிடுவாரா? அந்த சிற்பம் உயிர் பெற்று, பெண்ணாகி...."

"ஸ்டாப்! ஸ்டாப்! லைசென்ஸ் இல்லாம பேசிட்டுப் போறியே? நீ நினைக்கற மாதிரியெல்லாம் இல்லை. படத்துக்கு இன்னும் ஹீரோயினே டிஸைட் பண்ணலை. விஷயம் என்னன்னா, ஜாக்கிசான் படம் மாதிரி முழுமையான சண்டைப்படம் ஒண்ணு தமிழ்ல எடுக்கணும்னு அவருக்கு ஆசை. லேட்டஸ்டா, லயோலா காலேஜாண்ட ஆசைத்தம்பியை போலீஸ் சுட்டுக் கொன்னதே... அதே இடத்துல, அதே மாதிரி காட்சியை போலீஸ் பர்மிஷனோட போன வாரம் எடுத்து, படத்தை ஸ்டார்ட் பண்ணியிருக்காரு."

"படத்துல பாம்பு எதுவும் அவரைக் கடிக்குதா? பிளேனைப் பல்லால கடிச்சி இழுக்கறாரா?"

"அது தெரியலை. ஆனா, பயங் கரமான விஷயம் கேளு. அவரை ஷூட் பண்றாமாதிரி ஒரு சீன். துப்பாக்கியால சுட்டு, விழுறா மாதிரி எனக்கு தத்ரூபமா நடிக்கவெல்லாம் வராது. வேணும்னா நிஜ துப்பாக்கியால சுடுங்க. ஷாட்



* ஊர்மிளா : வேறு ஆள் கிடைக்கலையா?

* ஹூசைனி : பிளேனை இழுக்கிறாரா?

முடிஞ்சதும் ட்ரீட்மெண்ட் எடுத்துக்கறேன் அப்படீன்னாராம்! மிரண்டுட் டாங்க எல்லாரும்! ஆனா கடைசில அதுக் குத்தான் ஒத்துட்டு இருக்காங்க. 'ரொம்ப ரிஸ்க் ஆச்சே, படாத இடத்துல குண்டு பட்டுட்டா என்ன பண்றது'ன்னு யோசிச்சி கடைசில நம்ம ஒலிம்பிக் வீரர் ஒருத்தரைக் கூப்பிட்டு வரப் போறாங்க ஷூட் பண்றதுக்கு."

"அங்கதான் உதைக்குது. சினிமாக்குன்னாலும் கடறதெல்லாம் சட்டப்படி குற்றமாச் சேய்யா! புடிச்சி உள்ள தள்ளிடுவாங்களே... அதையும் சேர்த்துப் படம் புடிச்சிடுவாங் களாயிருக்கும். சரிவுடு.... டைட்டில் பொருத்தமா இல்லையே, தண்டபாணி?"

"உன்னையும் என்னையும் கேட்டுட்டுத் தான் டைட்டில் வெக்கணும்னு பின்ன ஜி.ஓவா போட முடியும்? ஷங்கர் தன்னோட அடுத்த படத்துக்கு 'ஜீன்ஸ்'னு டைட்டில் வெச்சிருக்கார் தெரியுமா?"

"போன நூற்றாண்டு செய்தி."

"பிரசாந்த் அதுல டபுள் ஆக்ஷன்றது தெரியுமா? ஜோடி ஐஸ்வர்யாராய்னு தெரியுமா?"

"காதுல விழுந்தது. புதுசா ஏதாவது சொல்லு."

"நாசர் நடிக்கறார்."

"அதிலென்ன புதுசு?"

"நாசரும் டபிள் ஆக்ஷன்! வாழ்க்கையிலேயே முதல் முறையா டபுள் ஆக்ஷன் பண்ணப் போறார்!"

"அட, அப்படியா?"

"அது மட்டுமல்ல, முழுப்படமும் ஹாலிவுட்ல எடுக்கப் போறாங்க!"

"பாருய்யா! ஹாலிவுட்காரங்க கோடம்பாக்கத்தைத் தேடி வராங்க... இவங்க ஹாலிவுட்டுக்கு டிக்கெட் வாங்கறாங்க. என்ன ஒரு காண்ட்ராஸ்ட்! போகட்டும். நீ என்ன நினைச்சுட்டிருக்கே? ஒரே ஆம்பளை நியூஸா சொல்லிட்டிருக்கே? நாட்டுல ஹீரோயின் களெல்லாம் ராஜினாமா பண்ணிட்டாங்களா?"


நாசர் : டபுள் ஆக்ஷன்

"விடமாட்டியே? கேளு. பம்பாயில இப்ப லேட்டஸ்ட் கிசுகிசு என்ன தெரியுமா? ஊர்மிளாவுக்கும் வினோத் காம்ளிக்கும் லவ்ஸ்!"

"நிஜமாவா?"

"உன்னை மாதிரி ஒரு 'பத்திரிகைக்காரன் விஷயம் கேள்விப்பட்டு, உணர்ச்சிவசப்பட்டு ஊர்மிளா கிட்டவே போய், 'என்னா மேடம், மெய்யாவா?'ன்னு கேட்டிருக்கான்."

"வீர சபதம் செஞ்சிருப்பாங்களே, இல்லைன்னு?"

"நீ வேற! 'போயும் போயும் என்னோட சேர்த்து கிசுகிசுக்க வினோத் காம்ளிதான் கிடைச்சாரா, ஒரு சச்சின் டெண்டுல்கரோ அனில் கும்ப்ளேவோ மாட்டலையா'ன்னு ரொம்ப கூலா கேட்டுட்டுப் போயிட்டாங் களாம்!"

"அடப்பாவி! நாடு எவ்ளோ முன்னேறிடுச்சிய்யா!"

"முன்னேற்றம்தான்! கலைவாணர் அரங்கத்துல இந்தியன் நூறாவது நாள் விழாவுக்குப் போயிருந்தனா... ஒரு செகண்ட் மிரண்டுட் டேன். ஏதுடா, இன்னொரு வளர்ப்பு மகன் கல்யாணமாங்காட்டியும்னு... வாசல்ல அலங்காரம் பண்ணின குதிரைங்க என்ன, பேண்டு மியூஸிக் என்ன... சீரியல் பல்பு செட் என்ன... மலர் தூவி வரவேற்பு என்ன..."

"அது இருக்கட்டும். உள்ள எதனா விசேஷம் உண்டா?"

"அமிதாப்பச்சன் வந்தது, சரிகா கமல் மொட்டை அடிச்சிட்டு வந்தது எல்லாம் விசேஷம்னு தோணிச்சின்னா வெச்சிக்கோ. ஒரு விவகாரம் கேளு முதல்ல... சுஜாதா பேசறப்போ உங்க பத்திரிகையை ஒரு புடி பிடிச்சார்!"

"அதென்ன?"

"உங்க கேள்வி - பதில்ல, 'இந்தியன்ல சிறப்பான விஷயம் அந்த மேக்-அப்தான்'னு பதில் சொல்லியிருந்தீங்க இல்ல? அதை பலம்மா கண்டனம் பண்ணார் சுஜாதா. 'என்ன ஒரு பொறுப்பில்லாத பதில்... ஒரு படத்தோட சிறப்பு அதில் வர்ற மேக்-அப் மட்டும் தான்னு எப்படி சொல்லப் போறது? கமல் மாதிரி ஒரு பெஸ்ட் ஆக்டர் இருந்தத்தொட்டுத்தானே மேக்-அப் எடுபட்டுது?' அப்படீன்னு ரொம்ப வருத்தப்பட்டாரு."

"கமல் பெஸ்ட் ஆக்டர்னு புதுசா சொல்லணுமா? அந்தப் படத்துல அந்தக் கிழ மேக்-அப் தவிர வேறென்ன புதுசா கவர்ந்து இழுக்கற விஷயம் இருந்ததுன்னு சுஜாதாவே சொல்லியிருந்தால் தேவலை!"

"ஏன், சுஜாதா பக்கம் இருக்கே? அதுல அவர் கருத்தை விளக்கும்படிக் கேட்டுக்கிட்டா சந்தோஷமா எழுதுவாரே?"

"பரவாயில்லை. உபயோகமா ஒரு வரி சொன்னே! ஐடியாவை அப்படியே சுஜாதா கிட்ட பாஸ் ஆன் பண்ணிடறேன். வரட்டுமா?"

— கிச்சா

## 35. மாலை சூடிய வாள்

கிருஷ்ணபட்சம் துவங்கி ஆறு தினங்களுக்கு மேல் ஓடிவிட்டதால் தனது கதிர்களைச் சற்று பலமாகவே தஞ்சை அரண்மனை நந்தவனத்தில் பாய்ச்சிய நிலவு, கிளைகளையும் இலைகளையும் ஊடுருவித் தரையில் திட்டுத் திட்டாக ஒளியோவியங்களை வரைய முயன்று கொண்டிருந்தது. நிலவை வம்பிழுக்க முயன்ற முன்னிரவின் குளிர்க்காற்று, கிளைகளை அசைத்து அந்த ஓவியங்களை அசைத்து, வடிவங்களை மாற்றிக் கொண்டிருந்தது. மதில்களின் மீது பற்றிப் படர்ந்த கொடிகளினூடே தொங்கிய கயிற்றைப் பிடித்தபடி இறங்கியவன், சுற்றிலும் பார்வையால் துழாவினான். தரை தொட்டதும் சற்று நின்றான். தூரத்து மாளிகையில் சாளரத்தினருகே ஒரு பெண் நிற்பதும், மாளிகையின் மேற்புறத்தில் காவலர் உலவுவதும் தெரிந்தன. வெகு அமைதியாகக் கிடந்த அந்த நந்தவனப் பகுதியில் தன்னை எவரும் கவனிக்கவில்லையென்பதை உறுதிப்படுத்தவே, வலதுபுறம் திரும்பிய அந்த மனிதன், செடிகொடிகளினூடே மறைந்தபடி மதிலை ஒட்டி நடக்க ஆரம்பித்தான். சற்றுத் தொலைவு



வந்ததும் திடீரென அவன் முன்னே நகர்ந்து, வழியை மறித்த வைரம் பாய்ந்த மரமொன்றின் மீது மோதி, தடுமாறி நின்றான். அந்த மரத்திற்கு வலுவான இரு கரங்கள் முளைத்திருந்தன. அவற்றுள் ஒன்று அவனை நோக்கி நீண்டு அவன் கழுத்தில் பதிந்து அவனை அசையவொட்டாமல் பிடித்து நிறுத்தவும் செய்தது. இரண்டு கணங்களுக்குப் பிறகே தான் மோதியது மரமல்ல என்பதும் தஞ்சைத் துறவியாரின் ஆஜானுபாகுவான தேகம் என்பதும் புரிந்தது அவனுக்கு. திடுக்கிட்டுத் திரும்பியபோது, செடிகளின் மறைவிலிருந்து வீரர்கள் பலர், நிலவொளியில் பளபளத்த ஈட்டிகளுடன் எழுந்து அவனைச் சூழ்ந்து கொள்ள முற்படுவதும் புலப்பட்டது.

அவன் கழுத்தில் பதிந்து அவனை அசையவொட்டாமல் அடித்துவிட்ட துறவியாரின் கரம், அவனை நிலவொளி பாய்ச்சிய இடத்திற்கு இழுத்து வந்தது. அவனது நீண்ட சடைமுடியும், தாடி மீசைகளும் கழுத்தில் கிடந்த மணிகளும் அவன் ஒரு காளாமுகன் என்பதைக் காட்டினாலும் திருதிருவென விழித்த அவன் விழிகள் அவன் மெய்யாக யாரென்பதை உணர்த்திவிட்டதால் துறவியாரின் குரல் கடுமையுடன் ஒலித்தது. "இவன் காடவராயனின் உபதலைவன். இவனை அமைச்சரிடம் ஒப்படைத்து விசாரிக்குமாறு கூறுங்கள்" என்றவர், வீரர்களிடம் அவனை உதறினார். வீரர்கள் அவனை இழுத்துக் கொண்டு அகன்ற பிறகும் அங்கேயே நின்ற துறவியாரின் முகத்தில் சிந்தனை படர்ந்து சற்று நேரம் நிலைத்தது. காஞ்சியிலும் தொண்டை மண்டலத்திலும் மூளவிருந்த போர்களையும், காடவராயனாலும் அவன் வீரர்களாலும் ஏற்படக்கூடிய விவகாரங்



"சரி பிரபு!"

"இரு தினங்களில் மிக முக்கியமான ஒருவர் அங்கு வந்து சேருவார். உடனே கலங்களுடன் வடக்கு நோக்கிப் புறப்படலாம்."

"எங்கு பிரபு?"

"நீர் இதுவரை நெல்லூர் புரத்தைக் கண்டிருக்கிறீரா?"

"இல்லை பிரபு."

"இப்போது சென்று அங்கிருக்கும் கோட்டையையும் காகதீய ருத்ராம்பாளையும் பார்த்து நலம் விசாரித்து விட்டு வாரும்."

"பாக்கியம் பிரபு!" என்ற கோட்டைத் தலைவன், மீண்டும் அழைத்தான் "பிரபு!"

"இன்னும் என்ன?"

"கலத்திற்கு வருபவர் வடமேற்கிலிருந்துதானே வர வேண்டும்?"

கோட்டைத் தலைவனின் யூகத்தை உள்ளுக்குள் வியந்து கொண்ட துறவியார், ஆமென் பதற்கடையாளமாகத் தலையசைத்தார். கோட்டைத் தலைவனின் அடுத்த கேள்வியும் அவர் எதிர் பார்த்தபடியே வந்தது.

"பிரபு, அப்படியானால் வடகிழக்கில் நடந்த போர்...?"

"முடிந்து விட்டது."

"போசள வீரன் சோமேஸ்வரன்...?"

"வீரமரணம் அடைந்து விட்டான்."

# இந்திர தனுசு

## விஷ்வக்சேனன்

களையும் பற்றி சிந்தித்தவர், திரும்பித் தமது மாளிகையை நோக்கி விடுவிடுவென நடந்தார். மாளிகையை அடைந்ததும் கோட்டைத் தலைவனை அழைத்து வரவும் ஆணையிட்டார். சற்று நேரத்தில் உள்ளே நுழைந்து வணங்கிய கோட்டைத் தலைவனை ஏறெடுத்து நோக்கியவரின் விழிகளில், இன்னும் சிந்தனை மிதந்து கொண்டிருந்தது.

"கோட்டைத் தலைவரே, நமது வீரர்களைத் திரட்டிக் கொண்டு நாகைக்குச் சென்று விடும்."

"உத்தரவு பிரபு."

"நாகையில் நமது கலங்கள் தயாராக நிற்கின்றன. உடன் கொற்கையிலிருந்து வந்த கலங்களும் காத்திருக்கின்றன."

கோட்டைத் தலைவனின் உடல் கூரையைத் தொட்டு விடுவது போல் நன்றாக நிமிர்ந்தது. முகத்திலும் விழிகளிலும் ஓர் ஒளிபரவியது. அவன் வலது கரம் நகர்ந்து வாளின் பிடியில் சென்று அமர்ந்தது. துறவியாரை நோக்கித் தலை வணங்கியவன், "சென்று வருகிறேன் பிரபு" என்று திரும்பி நடந்தான். வெகுகாலத்திற்குப் பின்பு அவன் வாளுக்கு வேலை வந்திருப்பதை உணர்ந்ததாலோ என்னவோ, கோட்டைத் தலைவனின் கால்கள் இடமாகப் பதிந்து நடப்பதைக் கவனித்த துறவியாரின் முகத்தில் முறுவ

லொன்று படர்ந்தது.

சரியாக முப்பது நாழிகைகள் கழித்து தஞ்சைக் கோட்டையின் வாயிலிலிருந்த முரசுகள் பலமாக முழங்கின. ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் வீரர்களுமாக கோட்டை வாயிலில் திரண்டார்கள். நான்கே வீரர்கள் பின் தொடர, கோட்டைக்குள் நுழைந்தவனை தஞ்சை மக்கள் பார்த்த பார்வைகள் ஏதோ அதிசயப் பிராணியைப் பார்ப்பது போலவேயிருந்தன. வந்தவனின் மஞ்சள் முகமும் பளிச் பளிச்சென்று மின்னிய சிறு விழிகளையும் சற்று மெலிந்தாற்போலிருந்த தேகத்தையும் பார்த்த போது, 'இந்த சீனத்து வாலிபனா சோழ நாட்டிலிருந்த போசளர் படைகளையும் சிங்கணனிருந்த கண்ணனூர்க் கோட்டையையும் நிர்மூலமாக்கியவன்?' என்ற வியப்பும் மகிழ்ச்சியும் மக்களிடையே உண்டாயிற்று. அவர்கள் எழுப்பிய வாழ்த்தொலி மெள்ள மெள்ள உயர்ந்து விண்ணைப் பிளந்தது. அரண்மனையை அவன் அடையுமுன் அவனுக்கும் அவன் அமர்ந்து வந்த புரவிக்கும் மட்டுமின்றி அவன் தோளின் பின்னாலிருந்து தலைநீட்டிய வாளுக்கும் கூட மாலைகளைச் சூட்டியிருந்தார்கள் தஞ்சை நகரத்து மக்கள்!

அரண்மனைக்குள் நுழைந்ததும் அவனை வரவேற்ற அமைச்சர் நேராக துறவியாரது மேன்மாடத்து அறைக்கு அழைத்துச் சென்றார். மாலைகளும், கழுத்துமாகத் தன்னை வணங்கி நிமிர்ந்த யுவானைக் கண்ட துறவியாரின் முகத்தில் முறுவலொன்று படர்ந்தது. குறுகிய காலத்தில் வீரபாண்டியனிடம் பெற்ற பயிற்சியும், கலந்து கொண்ட போர்களும் அவனைப் பட்டை தீட்டியிருப்பதையும், கடல் நாகம் பதித்த பதக்கம் ஊசலாட, திடமாக அடியெடுத்து வைத்த யுவானின் கரங்களில் புதிதாக வாள் வடுக்கள் தென்படுவதையும், பெரும் நிதானம் அவன் முகத்தில் விரவிக் கிடப்பதையும் கவனித்த துறவியாரின் முறுவல் இன்னும் விரிந்தது.

"யுவான், பாண்டியர் சகவாசம் உன்னைப் பெரிதும் மாற்றியிருக்கிறது" என்றார் துறவியார் அதே முறுவலுடன்.

மாலைகளைக் கழற்றியபடியே யுவான் பதிலளித்தான். "துறவியாரே, பூவோடு சேர்ந்திருந்த நாரும் மணம் பெறுவதில் வியப்பென்ன இருக்கிறது?"

துறவியார் பெரிதாக நகைத்தார். "தமிழிலும் நன்றாகத் தேறியிருக்கிறாய்" என்றார் நகைப்பினூடே.

அதற்கும் பதில் வந்தது யுவானிடமிருந்து. "பாண்டியர்கள் தமிழை வளர்ப்பவர்கள். என்னிடமிருந்ததையும் சற்று வளர்த்திருக்கிறார்கள்."

"சரி யுவான். எல்லையில் நிலைமை எப்படியிருக்கிறது?"

"காடவராயனைத் தவிர மற்ற சிற்றரசர்கள் அடங்கி விட்டார்கள். இவன் எங்கிருக்கிறான் என்பதுதான் தெரியவில்லை."

"காடவராயன் தஞ்சையில்தான் இருக்கிறான். அவன் உபதலைவன் ஒருவன் நேற்று இங்கு சிக்கினான்."

யுவானின் விழிகளில் ஆவல் தெறித்தது. "அவனை என்னிடம் விட்டு விடுங்கள். ஒரே நாழிகையில் அனைத்தையும் கக்க வைக்கிறேன்" என்றான் யுவான் ஆவல் குரலில் தெறிக்க.

துறவியார் மீண்டும் நகைத்தார். "அவனை நான் கவனித்துக் கொள்கிறேன் யுவான்.

## அருள்வாக்கு

கர்மா என்றால் என்ன? கர்மம் என்பது காரியம். ஒரு வேஷ்டியை உண்டாக்குவதற்கு எவ்வளவு காரியங்கள் செய்ய வேண்டியிருக்கின்றன! பஞ்செடுத்து, கொட்டை பிரிந்து, நூல் நூற்று, தறியில் நெய்து, சாயம் தோய்த்து – என்றிப்படி எத்தனை செய்யவேண்டியிருக்கிறது? அதைப் போல அநேக காரியங்கள் பண்ணி ஒருவனை ஆத்மவித்தாக்க வேண்டும். குணத்தினாலும் சரீரத்தினாலும் சேர்ந்து, ஒன்றையொன்று பரிசுத்தி பண்ணிக் கொள்ளும் முறையில் கர்மா செய்யவேண்டும். இப்படிப் பட்ட கர்மாவுக்கு ஸம்ஸ்காரம் என்று பெயர்.

ஒரு பதார்த்தத்துக்கு உள்ள தோஷத்தைப் போக்குவது எதுவோ, குணத்தைப் புகட்டுவது எதுவோ அதுதான் ஸம்ஸ்காரம். உதாரணமாக கேச ஸம்ஸ்காரம் என்பது க்ஷௌரம் (க்ஷவரம்) செய்து கொள்வது, அழுக்கு, பேன் முதலியவைகளை எடுப்பது, தைலம் தேய்ப்பது முதலியவை. ஜீவாத்மாவுக்கு தோஷங்கள் இருக்கின்றன. தோஷத்தை நிவர்த்தி பண்ணி குணத்தை நிரப்பவேண்டும். சீப்பினால் வாரித் தைலம் தேய்ப்பது போன்றது ஸம்ஸ்காரம். வயலில் சில ஸம்ஸ்காரங்கள் செய்யப்படுகின்றன. முதலில் காயப் போட வேண்டும்; பின்பு உழ வேண்டும்; ஜலம் விட்டுப் பரம்படிக்க வேண்டும்; பிறகு விதைக்க வேண்டும்; நாற்றுப் பிடுங்க வேண்டும்; களை பிடுங்க வேண்டும்; ஜலம் பாய்ச்ச வேண்டும்; அதிக ஜலமிருந்தால் மடை திறந்துவிட வேண்டும்; விளைந்த பின் அறுவடை செய்ய வேண்டும்; களத்தில் அடிக்க வேண்டும்; பதர் தூற்ற வேண்டும்; நெல்லைக் கோட்டை கட்டவேண்டும்; பின்பு அந்த நெல் பழக வேண்டும். அப்புறம்தான்



அதை உபயோகிக்க வேண்டும். இவ்வளவு காரியங்கள் இருக்கின்றன. பஞ்சு நூலாகி வேஷ்டியாக வேண்டுமென்றால் பல காரியங்கள் செய்ய வேண்டியிருக்கின்றன. பஞ்சு யந்திர சாலையில் எவ்வளவு காரியங்கள் செய்யப்படுகின்றன? நூல் சிக்கலாகாமல் நெய்ய எத்தனை ஜாக்கிரதையுடன் எவ்வளவு செய்ய வேண்டியிருக்கிறது? நம்முடைய ஆத்மாவானது இந்திரிய சலனங்களால் சிக்கலாக இருக்கிறது. சிக்கலை எடுத்து எப்பொழுதும் ஆனந்தமாக இருக்கச் செய்ய வேண்டும். அப்படிச் செய்வதற்குப் பல தடைகள் இருக்கின்றன. ஏதோ சில ஸமயங்களில் மட்டும் இப்போது ஆனந்தம் உண்டாகிறது. வலி இருந்தும் இவ்வளவையும் மீறிக்கொண்டு கொஞ்சம் ஆனந்தம் உண்டாகிறதே. இந்த ஆனந்தம் எப்பொழுதும் இருக்குமாறு பண்ண வேண்டும். அதற்காக ஜீவனைப் பிரம்மலோகத்தில் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். ஈசுவர ஸந்நிதானத்தில் சேர்த்துவிட்டால் அப்புறம் துன்பமே இராது. பிரளயத்துக்கு அப்புறம் ஐக்கியம் உண்டாகும். ஆகையால் அங்கே சேர்க்கத் தயார் பண்ண வேண்டும்.

இதற்குத்தான் 40 ஸம்ஸ்காரங்களையும் 8 ஆத்ம குணங்களையும் சிஷிகள் சொல்லியிருக்கிறார்கள்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

உனக்கு வேறு பணி காத்திருக்கிறது."

"என்ன பணி துறவியாரே?"

"காஞ்சிக்குத் தூதுவனாக நீ செல்ல வேண்டும். சோழர் சார்பாக அல்ல. பாண்டியரின் தூதனாக. விவரம் இந்த ஓலையிலிருக்கிறது" என்ற துறவியார் ஓலைக் குழலொன்றையும் நீட்டினார்.

யுவானின் மஞ்சள் முகத்தில் கேள்விக்குறி எழுந்தது. "துறவியாரே, கண்டகோபாலனைப் பொறுத்தவரை சோழரும் பாண்டியரும் இன்னும் எதிரிகள்தானே?" என்றான் யுவான்.

"ஆம் யுவான். கண்டகோபாலனைக் காஞ்சியை விட்டு வெளியே இழுக்க வேண்டும். வடக்கிலிருந்து மன்மசித்தனும், அவனைத் தொடர்ந்து காகதீய மன்னனும் வேறு, காஞ்சியை நோக்கி வந்து கொண்டிருக்கிறார்கள்."

"இது போதும் துறவியாரே, கண்டகோபாலனைக் காஞ்சியை விட்டுத் தெற்கில் இழுத்து விடுகிறேன். அவனை உதவிக்கு அழைத்து, சோழ மன்னர் சார்பாக முன்னதாக ஓர் ஓலை மட்டும் மீண்டும் அனுப்பி விடுங்கள்" என்ற யுவான் "நான் நாளைக் காலையே புறப்படுகிறேன் துறவியாரே, செல்லுவதற்கு முன்பாக இளவரசியாரையும் ஒருமுறை காண வேண்டும்" என்றான்.

"தாராளமாக" என்ற துறவியார் யுவானை அழைத்துக் கொண்டு நந்தவனத்து மாளிகையை நோக்கி நடந்தார்.

**ம**றுதினம் யுவான் காஞ்சிமா நகருக்குள் பிரவேசித்தபோது, காஞ்சியின் கோட்டையிலும், வீரர்களிடையேயும் மட்டுமின்றி அரண்மனையிலும் கண்டகோபாலன் அவசரமாகக் கூட்டியிருந்த சபையிலும் கூட குழப்பமான சூழ்நிலையே நிலவிக் கிடந்தது. அத்தாணி மண்டபத்தில் பிரதானிகளுடனும், கோட்டைத் தலைவனுடனும் அவன் உபதலைவர்களுடனும் விவாதித்துக் கொண்டிருந்த கண்டகோபாலன் பாண்டிய தூதன் வந்திருப்பதை அறிவித்த வீரனையும், சபையையும் ஒருமுறை வெறித்தான். சபையிலிருந்தவர்கள் முகங்களில் குழப்பம் கூடியே தெரிந்தது. "வரச் சொல்" என்று கண்டகோபாலன் உத்தரவிட்ட பின்பு சபையில் மௌனமே நிலவியது.

உள்ளே நுழைந்து வணங்கிய யுவானின் அலட்சிய நடையையும் பார்வையையும் கவனித்த கண்டகோபாலனின் முகத்தில் உஷ்ணமும் இலேசான சந்தேகமும் நிலவியது. "வந்த விவரத்தைச் சொல்" என்ற அவன் குரலிலும் கடுமை தெரிந்தது.

திடமாக ஒலித்தது யுவானின் குரல் : "காஞ்சி மன்னா! நான் கூறப் போவது இளைய பாண்டியர் ஜடாவர்ம வீர பாண்டியத் தேவரது வார்த்தைகள்" என்று சற்று நிதானித்த யுவான், "கண்டகோபாலரே, காஞ்சியை அபாயம் சூழ்ந்திருக்கிறது. கொங்கு நாடும் சோழ நாட்டின் தென்பகுதியும் எமது வசமாகிவிட்டன. காஞ்சியையும் தொண்டை மண்டலத்தையும் மீண்டும் தமிழ் மன்னர் வசமாக்க எமது மன்னர் தீர்மானித்திருக்கிறார். காஞ்சியை நீங்களாகவே எம்மிடம் ஒப்படைப்பது போரைத் தவிர்க்கும். இதில் உங்களுக்கும் லாபமிருக்கிறது" என்றான்.

"என்ன லாபம்?"

"உமது படைப்பிரிவை காளத்தியில் பொத்தப்பியின் மன்மசித்தன் முழுவதுமாக அழித்து விட்டான். காஞ்சியைத் தாக்கும் உத்தேசத்துடன் அவன் படைகள் இரண்டு காத தூரத்தில் நெருங்கியும் வந்து விட்டன. அவனைத்

மங்கையர் மலர்

செப்டெம்பர் '96

❖ இளைய சமுதாயத்திற்கு 'வழிகாட்டும்'
**'என்ன கோர்ஸ், எங்கு படிக்கலாம்?'**
**– பயனுள்ள தொடர் ஆரம்பம்**

❖ இந்த மாதம்
**சிறுவாச்சூர் மதுரகாளி**

❖ அடிபட்ட சகோதரிகள் அழுகிறார்கள்!
**– மனதை உருக்கும் சம்பவங்கள்**

❖ கருப்பை நீக்கம் செய்த பின்பு....
**– மருத்துவரின் பதில்கள்**





தொடர்ந்து உமது மன்னன் காகதீய கணபதியும் வந்து கொண்டிருக்கிறான். எம்மிடம் காஞ்சியை ஒப்படைப்பது உம்மை இருவரிடமிருந்தும் காத்துக் கொள்ள ஏதுவாக இருக்கும்."

"எமது மன்னர் வருவது என்னைத் தாக்குவதற்காக என்பது உனக்கெப்படித் தெரியும்?"

"உமக்கும் மன்மசித்தனுக்குமுள்ள பகையை எண்ணிப் பாரும். உமது மன்னன் தூண்டுதலில்லாமல் அவன் படையெடுக்கத் துணிய மாட்டான். உம்மைக் காஞ்சியிலிருந்து அகற்ற உமது மன்னர் தீர்மானித்து விட்டதாக நெல்லூர்புரத்திலிருக்கும் எமது ஒற்றர்கள் தெரிவித்திருக்கிறார்கள்."

"இது வெறும் கட்டுக்கதை. அப்படியேயிருந்தாலும் எமக்கு சோழ மன்னர் ஆதரவிருக்கிறது. சோழ தூதரின் ஓலையும் என்னிடமிருக்கிறது. சோழர் ஆதரவிருப்பவரைத்தான் எமது மன்னர் காஞ்சியில் மன்னனாக அமர்த்தவும் இயலும்."

யுவான் பலமாக நகைத்தான்.

"ஏன் நகைக்கிறாய்?" கண்டகோபாலன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன.

"உமக்கு ஓலை கொண்டு வந்த சோழ தூதர் தற்போது நெல்லூர்புரத்து சிறையிலிருக்கிறார்."

"இது வெறும் வதந்தி. என் செவிகளுக்கும் இது எட்டியது. ஆனால் சோழ தூதரைச் சிறை செய்யும் அதிகாரம் எமது மன்னருக்குக் கிடையாது; செய்யவும் மாட்டார்" என்றான் கண்டகோபாலன்.

அவையிலிருந்த பிரதானிகளும், படைத்தலைவர்களும் குழப்பத்துடன் பேசிய சொற்கள் தொடர்ந்து எழுந்து, அமைதியற்ற சூழ்நிலை சற்று நேரம் நிலவியது.

யுவானின் முகத்தில் முறுவல் விரிந்திருந்தது. அடுத்து அவன் சொற்கள் ஒலிக்கத் தொடங்கியதும் சபையில் சட்டென்று அமைதி நிலவத் தொடங்கியது.

"மன்னா, சோழ தூதனாக இங்கு வந்தவர் பாண்டியரைச் சேர்ந்தவராக இருந்தால் சிறை செய்யலாமல்லவா?" என்றான் யுவான் முறுவலுடன்.

கண்டகோபாலன் முகத்தில் மட்டுமின்றி அவையிலிருந்தவர்கள் முகங்களிலும் திகைப்பு பரவியது.

"என்ன உளறுகிறாய்?" கண்டகோபாலன் இரைந்தான்.

பதிலுக்குப் பெரும் வெடியை எடுத்து வீசினான் யுவான். "உளறவில்லை மன்னா. உண்மையைத்தான் கூறுகிறேன். இங்கு சோழ தூதனாக வந்தவர் உண்மையில் எமது இளவரசர் ஆதித்ய பாண்டியர்" என்றான் யுவான்.

அந்த அத்தாணி மண்டபம் அப்படியே ஸ்தம்பித்தது.

(தொடரும்)

"வா!" என்றாள் அம்மா. சருகு மாதிரி ஆகி விட்ட முகத்தில் நிரந்தரமான சோக ரேகைகள். என்றாவது அம்மா மலர்ந்து சிரித்துப் பார்த்திருக்கிறோமா என்று புவனா நினைத்துப் பார்த்தாள். ஞாபக மில்லை.

அப்பா, அம்மாவுக்குத் தாலி கட்டி விட்டு, குதிரைகளோடு குடித்தனம் நடத்தத் தொடங்கின தினத்தில் சுருங்கிய முகம் அது.

ஆனால் ஒரு வார்த்தை அவள், அப்பாவை எதிர்த்துப் பேசியது கிடையாது! மனசுக்குள் புழுங்கிப் புழுங்கி லட்சம் தடவை செத்துப் போயிருப்பாள்!

அது பற்றி புவனா கேட்கிற போதெல்லாம், "இது சிறை புவனா. மீள முடியாத சிறை. ஆனா எனக்குன்னு விதிச்சதை அனுபவிச்சுத்தானே ஆகணும்? நீ போயிடு. யாரையாவது காத



# ஏ கிளாஸ் ஜெயில்

லிச்சி, கல்யாணம் பண்ணிண்டுடு. இவர் பண்ணி வெப்பார்னு காத்திருக்காதே!" என்பாள்.

ஒரு அம்மா பேசுகிற பேச்சா? ஆனால் காரணமில்லாமல் இல்லை. புவனாவின் கலை வெறி.. அரிசியில் படம் வரைகிற பொறுமையும் திறமையும்... தரையில் பாதம் படுவது தெரியாமல் பரதம் ஆடுகிற லாகவம்... மணிக்கணக்கில் உட்கார்ந்து, கிரங்கிப் போய் கோலங்களில் ஜாலம் காட்டும் நேர்த்தி...

லட்சுமணனைக் காதலித்து, கைப்பிடித்து, வீட்டை விட்டு வந்து தனிவாழ்க்கை தொடங்கியபோது சிறகடிப்பது போலத்தான் இருந்தது. ஆனால் பறவைகளும் தரையிறங்கத்தானே வேண்டியிருக்கிறது?

"புவனா, நீ படிச்சவள். வாழ்க்கைக்குக் காசு முக்கியம். அதுதான் கடவுள். உன் நடனமும் அரிசி பொம்மையும் நாலு பைசாவுக்குப் பிரயோஜனப்படுமா? எல்லாரும் பத்மாசுப்ரமணியம் ஆகறதில்லை. தப்பா எடுத்துக்காதே. நீ என்ன பண்றே..."

வேலைக்குப் போனாள். நட்சத்திர ஓட்டலில் ரிஸப்ஷனிஸ்ட். முகம் நிறையப் புன்னகையும் மடி நிறையப் பணமும்.

ஃப்ரிட்ஜ், டீவி, வாஷிங்மெஷின், வாரம் ஒரு புடைவை... மாதம் இரண்டு சினிமா என்று வாழ்க்கை சுகமாகத்தான் ஓடுகிறது...

நாட்டியமும் அரிசி ஓவியமும் வண்ணக் கோலங்களும் அவ்வப்போது எண்ணிப் பெருமூச்சு விட உதவின.

படுக்கையறையில் கண்ணை மூடி, 'எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா' என்று லட்சுமணன் எப்போதாவது பாடுவான். புவனா சிரித்துக் கொள்வாள்.

**ஊ**ர்க்கதை, சொந்தக் கதை, சோகக் கதை எல்லாம் பேசிவிட்டு, அப்போதுதான் ஞாபகம் வந்தவளாக அம்மா கேட்டாள் : "எனக்குத்தான் ஜெயில்னு ஆயிடுத்து. நீயாவது நல்லாருக்கியா புவனா?"

புவனா சிரித்தாள். அம்மாவை உற்றுப் பார்த்துச் சொன்னாள் : "ஓ யெஸ்! ஏ கிளாஸ் ஜெயில்!"

ஸ்ரீராம்













— இந்தியன் ஃபீச்சர்ஸ் சிண்டிகேட்




...இப்போது எனக்கென்ன கவலை!"




இப்போது குறைந்தபட்ச இலக்கான ஆண்டிற்கு **15%** ஆதாயத்தை கொண்டது.

(வருடாந்தரமாக்கப்பட்ட ஆதாயம் 16.08%)

## மாதாந்தர வருவாய் தேர்வு ♦ க்யூமுலேடிவ் தேர்வு

சிறப்பம்சங்கள்

- 2 தேர்வுகளைக் கொண்ட 5 வருட காலவரையைக் கொண்ட திட்டம்.
- **மாதாந்தர வருவாய் தேர்வு :** குறைந்தபட்ச இலக்கான ஆண்டிற்கு 15 சதவீதம் என்றவாறு டிவிடெண்ட் மாதாந்திரமாக முதல் ஆண்டில் வழங்கப்படும். முதிவு வருடம் முடிவுறும் முன் அடுத்துவரும் வருடங்களுக்கான டிவிடெண்ட் அறிவிக்கப்பட்டு முன்னதாகவே அனுப்பப்படும்.
- **க்யூமுலேடிவ் தேர்வு :** வருவாய் தொடர்ந்து சேர்த்துக் கொள்ளப்பட்டு முதிர்வுறும் சமயத்தில் மூலதன வளர்ச்சியாக விநியோகிக்கப்படும்.
- 3 வருடங்கள் கழித்து இரண்டு தேர்வுகளின் மீது என்ஏவி விலை அடிப்படையில் மறு கொள்முதல் செய்யும் வசதி.
- தேசிய ஸ்டாக் எக்ஸ்சேஞ்சில் பட்டியலிடப்படும்.
- குறைந்தபட்ச முதலீடு ரூ. 2000/- அதிகபட்ச வரம்பு கிடையாது.
- வருமான வரிச்சட்டம் 1961 பிரிவு 48 மற்றும் 80L ன் கீழ் வரிச்சலுகைகள்.
- வருமான வரிச்சட்டம் 1961 - ன் படி மூலாதார வரிக்கழிப்பு செய்யப்படும்.
- மாதத்தின் 15 ஆம் தேதிவரை ஏற்றுக் கொள்ளப்பட்ட விண்ணப்பங்களுக்கு அந்த மாதத்திற்கான முழு டிவிடெண்ட் வழங்கப்படும் மற்றும் மாதத்தின் 15 ஆம் தேதிக்கு பின் வந்து சேர்ந்த விண்ணப்பங்களுக்கு அரைமாத டிவிடெண்ட் வழங்கப்படும்.

CWPL/UTI/TAM/1030-96



**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

**உங்கள் வளமான நாளைக்கு**

**5 ஆகஸ்ட் முதல் 18 செப்டம்பர் '96 வரை**
**திட்டம் நடப்பிலிருக்கும்**

இடர்ப்பு நிலைமைகள் : பங்குகள், பாண்ட் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யப்படும் அனைத்து முதலீடுகள் மார்கெட் ஏற்றத் தாழ்விற்கு உட்பட்டவை. திட்டங்களின் என்ஏவி செக்யூரிட்டீஸ் மார்க்கெட்களை பாதிக்கும் காரணங்களால் ஏறவும் அல்லது இறங்கவும் செய்யலாம். கடந்தகால செயலாற்றல் எதிர்கால விளைவுகளைக் குறிப்பிடுவதாகக் கருதலாகாது. மந்த்லி இன்கம் பிளான் '96 - II என்பது திட்டத்தின் பெயரே தவிர, திட்டத்தின் தரத்தையோ, அதன் எதிர்கால வாய்ப்புகளையோ அல்லது ஆதாயங்களையோ ஒரு வகையிலும் குறிப்பிடுவதாகக் கருதலாகாது. திட்டத்தின் நோக்கங்கள் நிறைவேற்றப்படும் என்று உத்தரவாதம் அளிக்கப்பட மாட்டாது. குறைந்தபட்ச இலக்கான ஆண்டிற்கு 15% ஆதாயத்தை வழங்க போதுமான வருவாய் இல்லாவிடில் யூனிட்தாரர்கள் அந்த தொகை வரை யூனிட் மூலதனத்தில் இழப்பை ஏற்றுக் கொள்ள நேரிடும். முதலீடு செய்யும் முன் வழங்கு பத்திரத்தை தயவு செய்து படிக்கவும்.

மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் : யூடிஐ அலுவலகங்கள் : சென்னை : போன் : 517101, 517190, மதுரை : போன் : 38186, திருச்சி : போன் : 760060, கோவை : போன் : 214973. அல்லது முக்கிய பிரதிநிதிகள் / ஏஜெண்டுகள்.

# குறையொன்றுமில்லை

அவதாரங்களெல்லாம் முடிந்து பரமாத்மா ஆனந்தமாக வைகுண்டத்திலே உட்கார்ந்திருக்கார். தேவர்கள், முனிவர்கள் சூழ, பெரிய சதஸ் அங்கே... அப்படிப் பல நாள் உட்கார்ந்திருந்தவர் பூமியைப் பார்க்கிறார். பூமியைப் பார்த்ததும் அவருக்கு வருத்தம் வந்ததாம். ஏனென்றால் அவ்வளவு அக்கிரமங்கள் அங்கே நடந்து கொண்டிருந்தன!

'கிருஷ்ணாவதாரம் பண்ணினோமே. அப்போ கீதையைச் சொல்லிட்டு வந்தோமே. அதைச் சொல்லிட்டு வந்த பிற்பாடு கூட இன்னமும் உலகத்திலே அக்கிரமம் நடந்து கொண்டிருக்கிறதே.... அப்படியென்றால், நாம் சொன்ன கீதை பிரயோஜனமில்லாமல் அல்லவா போய்விட்டது!' என்று ரொம்ப வருத்தம் பரமாத்மாவுக்கு.

15

'நாம் சொன்னது போதவில்லை போலிருக்கிறது. நம் வாக்கு சரியில்லை போலும், அதனாலே வேறு வாக்கைக் கொண்டு அதே கருத்தை உலகத்துக்குத் தெரிவிக்க வேண்டும்' என்று முடிவு செய்தான்.

பக்கத்தில் இருக்கும் மஹாலக்ஷ்மியைப் பார்த்துச் சொன்னான் : "லக்ஷ்மி! நீ போய் பூலோகத்திலே பிறந்து, கீதையிலே நான் என்ன சொல்லி உபதேசம் செய்தேனோ, அதையே சொல்லி திருத்தக் கடவாய்...." என்றான்.

பூலோகத்திலே அவதாரம் பண்ணின காலத்திலே மஹாலக்ஷ்மியாலே பகவானை ஒன்றும் தட்டிக் கேட்க முடியல்லையாம். இப்போது, வைகுண்டத்திலே, பகவான், லக்ஷ்மியினிடத்திலே ஏகாந்தத்திலே அகப்பட்டுக் கொண்டு விட்டான்! நினைத்ததையெல்லாம் கேட்க அவளுக்கு ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது. கேட்கலானாள்:

"என்ன அக்கிரமம்! என்னைப் போய் அவதரிக்கச் சொல்கிறீர்களே. இது நியாயமா? உங்களோடு கூட வந்தபோதே எனக்குக் கௌரவம் இல்லை. இன்னும் தனியாக வேறு போகச் சொல்கிறீர்களே... இது நியாயமா?

"ராமாவதாரத்திலே உங்கள் கூட வந்தேன். எங்கேயாவது சுகம் என்பது எனக்கு அதில் இருந்ததா? ஏதோ கொஞ்சமே கொஞ்ச காலம், கனவு கண்ட மாதிரி அயோத்தியிலே கொஞ்சம் நாள் இருந்தது போல் தோன்றுகிறது. அதற்கப்புறம் ரொம்ப சிரமம். காட்டிலே வாழ்ந்து... இதெல்லாம் போகட்டும் என்றால், காமாசுரன் ராவணன் என்னைக் கண்டவாறு பேசினான். அதைக் கூட சகித்துக் கொள்ளலாம் போலாக்கி விட்டது உங்கள் செயல்... அத்தனை பேர் நடுவிலே என்னை நிறுத்தி மேலே தேவதைகள் பார்த்துக்கொண்டிருக்கும் போதே... என்னைக் கொண்டு வந்து நிறுத்தி நீங்கள் பேசினீர்களே...! அதை நினைத்தால்தான் துக்கம் தாளாமல் போகிறது...."

அக்னிப் பிரவேசத்தைப் பற்றித்தான் இவ்வாறு பேசினாள் மஹாலக்ஷ்மி. அக்னியை மூட்டச் சொல்லி லக்ஷ்மணனுக்கு சீதா தேவி கட்டளை பிறப்பித்தபோது, அவன் அண்ணாவின் முகத்தை அனுமதி தேடி நோக்கினானாம்! அப்போத ராமனோ, வாய் திறந்து கூடப் பேசாமல், புருவத்தை நெறித்தே அதற்குப் பதில் சொன்னாராம்!

அக்னிப் பிரவேசம் முடிந்து வைதேகியை வெளியிலே எடுத்து வந்த பிற்பாடு, 'என் சீதை ரொம்ப நல்லவள். இந்த உலகத்துக்காகத்தான் அவளை அப்படி அக்னிப் பிரவேசம் பண்ண வைத்தேன்' என்று ராமன் சொன்னதை நினைவூட்டி இப்போது மஹா



முக்கூர் லக்ஷ்மி நரசிம்மாச்சார்யார்

லக்ஷ்மி பேசுகிறாள்.

"காமாசுரன் ராவணன் பேசியது இருக்கட்டும்! அன்று நீங்கள் என்னை அத்தனை பாடுபடுத்தி, அவ்வளவு தூரம் பரீட்சை பண்ணிய பிறகும் நிறைமாத கர்ப்பிணியாக என்னைத் தனியே காட்டிலே விட்டு விட்டீர்களே! நான் மற்றவர்களால் பட்டதை விடவும் உங்களால் பட்டதே அதிக அவஸ்தை...!"

பகவான் பார்த்தான். மஹாலக்ஷ்மி இன்னமும் நிறுத்துகிற வழியாக இல்லை. ஒரு கமா போட்டு... அப்படி இலேசாக நிறுத்தியிருக்கிறாள் என்று புரிந்து கொண்டான். அடுத்து என்ன சொல்லப் போகிறாள் என்று பார்த்தான்... அதற்கப்புறம் ஏகமாக துக்கம் வந்து விட்டதாம் லக்ஷ்மிக்கு!

"இந்த ராமாவதாரமே பரவாயில்லே போலிருக்கிறது அதற்கடுத்த அவதாரத்தை நினைத்துப் பார்க்கும் போது..." என்று மீண்டும் பேச ஆரம்பித்தாள்.

அவளுடைய இந்தப் பேச்சுக்கு என்ன அர்த்தம் என்பது போல் பகவான், கண்களை அகல விரித்துப்





"'நம்ம தலைவர் மாதிரி விவரமா பேச ஆளில்லைப்பா!"

''எப்படி சொல்றே?"

"பூட்டிக் கிடக்கும் நூற்றுக்கணக்கான தொழிற்சங்கங்களை மீண்டும் திறக்க அரசு என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறதுன்னு ஒரு நிருபர் கேட்டதும்..."

"சொல்லு! சொல்லு! என்ன பதிலளித்தார்?"

"டூப்ளிகேட் சாவிகளைத் தயாரிக்க ஒரு தொழிற்சாலையை அரசே நிறுவும்னு சொன்னார்!"

- ஆர். ரகோத்தமன்

---

பார்க்கிறான்!

"ராமாவதாரத்திலே நீங்கள் எனக்குத்தான் என்று இருந்தது. கிருஷ்ணாவதாரத்திலே அதுவும் போய்விட்டது! அதிலும் அந்த சத்யபாமா இருந்தாளே....! எத்தனையோ பேர் உங்கள் மேல் பிரேமை கொண்டிருந்தாலும் உங்களைத் தன் முந்தானையிலேயே முடிச்சுப் போட்டு வைத்துக் கொள்ளணும் என்று எண்ணம் அவளுக்கு! இந்த சத்யபாமாவோடு ஒவ்வொரு விஷயத்துக்கும் நான் போராடிப் போராடி, உங்களை என் கிரஹத்துக்கு அழைத்துக் கொண்டு வருதற்குள் நான் பட்டபாடு....!"

அந்த ருக்மிணி-சத்யபாமா கதையைக் கொஞ்சம் பார்ப்போம்....

நாரத மஹரிஷி வீணையை வாசித்துக் கொண்டு ருக்மிணியின் கிரஹத்துக்கு வந்து விட்டார். ருக்மிணி துளசி பூஜை பண்ணியபடி இருந்தாள். "ருக்மிணி! நீ இப்படி இருக்கிறாயே! உலகத்திலே உன்னைப் போல ஓர் அபலை உண்டா....?" என்று கேட்டார் நாரதர்.

"சுவாமி! என்ன சுவாமி சொல்கிறீர்கள்?"

"நாளைக்கு ஒரு நாளாவது உன் பர்த்தாவை அழைத்துக் கொண்டு வந்து உன் கிரஹத்திலே இருக்கச் செய்ய வேண்டாமா நீ? இப்படி நீ அவனை நாளைய தினத்துக்காகவாவது அழையாமல் இருப்பது நியாயமா?" என்று கேட்டார் நாரதர்.

"நாளைக்கு என்ன சுவாமி?" வியப்புடன் கேட்டாள் ருக்மிணி.

''இதுகூடத் தெரியாமலிருக்கிறாயே? என்னை மாதிரி ஒருத்தர் உனக்கு எடுத்துச் சொல்லாமல் இருந்தால் என்னவாகியிருக்கும்! நாளைக்கு உன் பிறந்த நாள் அல்லவா? அன்றைய தினம் பர்த்தா (கணவன்) கூட இருக்க வேண்டாமா? நாளைக்குக் கூடவா சத்யபாமா கிரஹத்திலே அவன் இருக்கிறது?

'நாரதர் கலஹப்ரிய :' என்று நாரதரைப் பற்றி வசனம் சொல்வதுண்டு. கலகம் செய்வதிலே நாட்டம் உடையவன் என்று அர்த்தம்! அவர் தமக்குப் ப்ரியமான வேலையைச் செய்து விட்டார்.

உடனே ருக்மிணி, "இப்பவே போய் பகவானை அழைச்சுண்டு வந்துடறேன்..." என்று புறப்பட்டாள். வேத கோஷங்களும், வாத்ய கோஷங்களும் சூழ பகவானை அழைக்க அவள் போகிறாள்.

ருக்மிணி போய்ச் சேர்வதற்குள் நாரதர் சத்யபாமாவினுடைய கிரஹத்துக்குப் புறப்பட்டுப் போய்விட்டார். அங்கே சத்யபாமாவைப் பார்த்து, "உன்னைப் போலே ஓர் அபலை உண்டா?" என்றார்!

"ஏன் சுவாமி! ஏன் அப்படிச் சொல்கிறீர்?" என்றாள் சத்யபாமா.

"இந்த ருக்மிணிக்கு உன் பேரில் ரொம்ப அசூயை. வேண்டுமென்றே நாளைக்கு நாள் பார்த்து அந்த கிருஷ்ணனை உன்னிடத்திலேயிருந்து பிரிக்க வேண்டுமென்று அவள் வந்து கொண்டிருக்கிறாள். நாளைக்கு உன் புருஷன் அவசியம் உன்னோடு இருக்க வேண்டாமா?"

"நாளைக்கு என்ன விசேஷம் சுவாமி....?"

"இதுகூடத் தெரியாமல் இருக்கிறாயே. நீ கல்யாணம் பண்ணிக் கொண்ட நாள் அல்லவா... அன்றைக்கு நீ பர்த்தாவோடு இருக்க வேண்டாமா? அந்த நாளைக் கொண்டாட வேண்டாமா?"

"அந்த நாளைக் கொண்டாடணும்னு உண்டா சுவாமி...?"

"அப்படி வழக்கம் இல்லாமப் போனால் தான் என்ன, நீதான் அதை ஆரம்பித்துவையேன்!" என்றார் நாரதர்! ஆகையினாலே அன்னைக்கு ஆரம்பித்தது இன்னைக்கும் நடக்கிறது!

"சரி!" என்றாள் சத்யபாமா.

அந்த நேரம் பார்த்து ருக்மிணி அங்கே வந்தாள். அவளைப் பார்த்துவிட்ட சத்யபாமா உள்ளே போய்விட்டாள். உள்ளே கிருஷ்ணன் படுத்திருக்கிறான். பாமா போய் பகவான் கையை கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். 'வாய் திறந்து பேசவே கூடாது!' என்று அவனுக்குக் கட்டளை போட்டுவிட்டாள்!

ருக்மிணி, பகவானைப் பிரதட்சணம் பண்ணிவந்து நமஸ்காரம் பண்ணினாள். தன் வேண்டுகோளைச் சொன்னாள்.

பேசவே முடியலையாம் பகவானுக்கு! இப்படியும் பேச முடியலை - 'வரேன்' என்று சொல்ல முடியல்லை; 'போக மாட்டேன்'

என்றும் சொல்ல முடியலை - அங்கேயும் பேச முடியவில்லை!

வேதாந்த விஷயங்களையெல்லாம், ஏதோ கேலி பேச்சு பேசுகிற மாதிரி இலகுவாகப் பேசிய பரமாத்மா, அவ்வளவு உபநிஷத் விஷயங்களையும் கீதையாகக் கொட்டிய பரமாத்மா.... பேச்சடைத்து நிற்கிறாராம்; பதில் சொல்ல முடியாமல் அவஸ்தைப் படுகிறாராம்...!

இந்தக் காட்சியைத் தொலைவிலிருந்து பார்த்தபடி நாரதர் கைகூப்புகிறார். ஏனெனில், வைகுண்டத்துக்குப் போனால் இந்தக் காட்சியெல்லாம் பார்க்க முடியாது. அங்கே பகவான் சுவாமியாக - மஹாவிஷ்ணுவாக - அல்லவா உட்கார்ந்திருப்பார். இந்த மாதிரி லீலைகளெல்லாம் காணக் கிடைக்காதே அங்கே! எனவே அந்த லீலையைப் பார்த்து, நாரதர் கைகூப்பி ஆனந்தித்து சேவிக்கிறார்.

புளகாங்கிதமாய் நின்ற நாரதரை பகவான் பார்த்தார். ரொம்பக் கோபம் வந்துவிட்டது அவருக்கு. இவ்வளவு தூரம் சிண்டு முடியும் வேலையைச் செய்துவிட்டு சேவித்தபடி நிற்கிறாரே என்று கோபம். அவரையே பிரச்னைக்குத் தீர்வு கேட்போம் என்று முடிவு செய்து கேட்டார்.

"நாரதரே! பிறந்த நாள் அன்று தன்னுடன் இருக்க வேண்டுமென்று விதர்ப தேசத்து ராஜகுமாரி ருக்மிணி சொல்கிறாள்; 'நாளைக்குத் திருமண நாள், என்னுடன் இருங்கள்' என்று என் சத்யபாமா சொல்கிறாள்... இப்போ நான் எங்கே போகட்டும்? அங்கேயா? இங்கேயா... இவ்வளவுக்கும் காரணமாயிருந்த நீரே பதில் சொல்லும்" என்றார்.

அதற்கு நாரதர் சொன்னார்: "இந்த சண்டையெல்லாம் என்னால் தீர்க்க முடியாது. ஒரு மனைவி கணவனுக்குள்ளே சண்டையென்றாலும் பரவாயில்லை... இதுவோ பல மனைவி தகராறு... என்னைப் பார்த்துக் கேட்கிறாயே கிருஷ்ணா! உலகத்திலே எனக்கு இந்த விஷயம் பற்றி ஏதாவது அனுபவம் உண்டா!" என்றார்.

அந்த கட்டத்தில் பகவான் பட்ட அவஸ்தையைச் சொல்லி முடியாது. எப்படியோ சத்யபாமாவை வஞ்சித்துவிட்டு, ஒருத்தருக்கும் தெரியாமல் வீட்டைவிட்டுக் கிளம்பிப் போகிறான்.

இந்த வரலாறையெல்லாம் (ராமாவதாரம் - கிருஷ்ணாவதாரம்) ஞாபகப்படுத்தி பகவானுக்குச் சொன்னாளாம் மஹாலக்ஷ்மி. சொல்லிவிட்டு, "இவ்வளவு கஷ்டங்கள் நான் ஏற்கனவே பட்டது போதாதா! என்னைப் போய் திரும்பவும் அவதாரம் பண்ணச் சொல்கிறீர்களே; அதுவும் தனியாக! நான் போக மாட்டேன்" என்று மறுத்து விட்டாளாம் மஹாலக்ஷ்மி.

மஹாலக்ஷ்மி சொன்ன சரித்திரத்தையெல்லாம் கேட்டு, வைகுண்டத்திலிருந்தவர்கள் ஆனந்தித்தார்களாம். அவள் வாக்கிலேயிருந்து வருபவை எத்தனை ஆனந்தம் அளிக்கும்!

ஆனால் பகவானுக்குத் தன் காரியம் ஆக வேண்டும் இல்லையா.... அவன் இப்படித் திரும்பியிருந்த பார்வையை அப்படித் திருப்பி பூமித் தாயாரை நோக்கினான். மஹாலக்ஷ்மியிடம் சொன்னதை அப்படியே அவளிடம் சொன்னான். அவள் பதில் வேறு விதமாய் இருந்தது.

(தொடரும்)

## எறும்பார் கடிக்கிறார்....

**உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதிக்கு ஒப்பான மதிப்புடன் இருக்கும் சபாநாயகருக்கு எதிராக இப்படி வழக்குத் தொடருவது கேள்விப்படாத ஒன்று. தமிழக வரலாற்றிலேயே இதுவரை முன்னாள் சபாநாயகர் மீது இது போன்ற வழக்கு தொடரப்பட்டதில்லை.**

**— முன்ஜாமீன் மனுவில் சேடபட்டி முத்தையா**




**"ஏற்கெனவே சாப்பிட்டதுக்கே இன்னும் மாவாட்டி முடிக்கலை; அதுக்குள்ள அடுத்த வேளை 'மெனு'வைப் பற்றி விசாரிக்கிறியே, நல்லாருக்கா?"**

**— சீர்காழி வி. ரேவதி**



28.1.93

அன்புள்ள ஜெயஸ்ரீ,

என் வயது 33. கடந்த 15 வருடங்களாக குடும்பப் பிரச்னைகள், தொழில் பிரச்னைகள் மற்றும் போட்டி சூழலின் காரணமாக மனநிலை பாதிக்கப்பட்ட நோயாளியாக இருக்கிறேன். 1987ல் ....ல் பணியாற்றிக் கொண்டிருந்தபோது ரொம்பவும் 'டிப்ரஷன்' ஏற்பட்டு அந்த சமயத்தில் தனிமையில் எம்.எஸ்.சுப்புலட்சுமியின் பஜன்கள் அடங்கிய கேஸட்டை அடிக்கடிப் போட்டுக் கேட்பேன். என் மூளை, இதயம் ஆகிய இரண்டையுமே அவரது பக்தி ததும்பிய குரல் அமைதிப் படுத்தியது. பதினைந்து வருடங்களுக்கு முன்பே என் உள்ளுணர்வு கூறியது, என் மனநிலையை சமனப்படுத்த மருந்துகளைவிட, தியானத்தையே நம்ப வேண்டுமென்று. இன்று அந்த உணர்வு சரியானது என்பதை உணர்கிறேன். இடையில் சில வருடங்கள் மருந்துகளை உட்கொண்டபோது அவை எனக்கு எந்தவிதப் பலனையும் தரவில்லை.

இதையெல்லாம் உங்களுக்கு எதற்கு எழுதுகிறேன் என்றால் உங்கள் தெய்வீக இசையும் பலரது மன ரணங்களை குணமாக்கக் கூடிய சக்தி படைத்தது என்பதைக் கூறத்தான். இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைடி, மியூசிக் அகடமி, பாரத் கலாசார் ஆகிய மூன்று அரங்குகளில் உங்கள் கச்சேரியைக் கேட்கக் கூடிய நல்வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. இதுவரை வாய்ப்பாட்டு கற்றுக் கொள்ள வேண்டுமென்ற எண்ணம் இல்லாதிருந்த எனக்கு, உங்கள் கச்சேரியைக் கேட்டதிலிருந்து அந்த ஆசை தோன்றுகிறது.

உங்கள் குரலில் மீரா பஜன்கள் அடங்கிய கேஸட் ஒன்றை வெளியிடலாமே.

அன்புள்ள,

..........

இந்தக் கடிதத்தை எழுதியவர் ஒரு டாக்டர். இதைத் தொடர்ந்து அவ்வப்போது எங்களுக்கிடையே கடிதப் போக்குவரத்து நடந்து வந்திருக்கிறது. என் பாடல்களைக் கேட்டு மனநிலை பாதிக்கப்பட்ட அந்தப் பெண்மணி அமைதி பெற்றிருக்கிறார் என்பதை இந்தக் கடிதங்கள் மூலமாக அறிந்தபோது முதலில் ஆச்சரியமாக இருந்தது. அதற்குப் பிறகு கச்சேரிகளில் நான் அதிகப்படி பொறுப்புணர்ச்சியோடு பாடத் தொடங்கினேன்.

அவர் என் குரலை சற்று அதிகமாகப் புகழுவதாக எண்ணுகிறேன். ஆனால் ஒரே

# சந்தோஷத்தைக் கொடுத்த கடிதம்!

விதமான இசை, கேட்பவரின் ரசனையைப் பொறுத்து வெவ்வேறு விதங்களில் எடைபோடப்படுகிறது என்பதும் புரிந்தது.

இந்தக் கடிதம் பலவிதங்களில் எனக்கு சந்தோஷத்தைக் கொடுத்தது. என் பாடல்கள் உண்மையிலேயே அவரது மனநிலையைச் சீராக்கியதால்தான் அவர் மௌனக்கெட்டு கடிதம் எழுதியிருக்கிறார் என்பதும், என்னில் அவர் ஒரு தோழியைக் காண்கிறார் என்பதும் புரிந்ததால் இந்த மகிழ்ச்சி.

இசையால் பல அற்புதங்களை சாதிக்க முடியும் என்பதை நான் அறிவேன். லால்குடி ஜெயராமனின் வயலின் இசையைக் கேட்கும்போது என் மனக்கண் முன்னே அருவி கொட்டும். மலைப் பிரதேசம் தோன்றும். அதில் மான்கள் துள்ளி விளையாடும்!

பம்பாயில், பொதார் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது தேர்வு நாளன்று காலையில் என் தோழிகள் "தொடர்ந்து படித்து ஒரு மாதிரி இருக்கு. ஒரு பாட்டுப் பாடேன்" என்பார்கள். பாடி முடித்ததும் எங்கள் எல்லோருடைய டென்ஷனுமே பெருமளவு நீங்கியிருக்கும். தன் இசையால் தான்சேன் விளக்குக்களையே எரிய வைத்ததாகக் கூறப்படும் சம்பவம் கூட உண்மையில் நடந்திருக்கலாம்!

என் பெரியம்மா மகன் நியூரோ சர்ஜனாக இருக்கிறார். அவரிடம் இந்தக் கடிதத்தைப் பற்றிக் குறிப்பிட்டபோது "அந்த டாக்டருக்குத் தன் மருத்துவச் சூழலில் ஒருவித வெறுப்பு ஏற்பட்டிருக்கலாம். அதே சமயம் தன் கோப உணர்வுகளை வெளிக்காட்ட முடியாத சூழலிலும் அவர் இருந்திருக்கலாம். உன் பாடல்கள் அடங்கிய கேஸட்டை அவர் எப்போதும் ஆன் செய்யலாம்; நிறுத்தியும் விடலாம். இந்த சௌகரியத்தால் அவரது ஆளுமைக்குள் உள்ள ஒரு தோழியாக உன்னைக் கருதி அவர் மன அமைதி பெற்றிருக்கலாம்" என்றார்.

இதுவரை அந்த டாக்டரை நான் நேரில் சந்தித்ததில்லை. எப்போது என் தொலைபேசி எண்ணை அறிந்தும் அவர் என்னை நேரிடையாகத் தொடர்பு கொள்ளவில்லையோ, அதிலிருந்தே சற்று விலகி நிற்கும் எண்ணமும் அவருக்கு உண்டு என்று விளங்குகிறது. அவரது அந்த உணர்வுக்கு நானும் மதிப்பளிக்க வேண்டும் இல்லையா? அதனால்தான் அவர் பெயரைக் கூட நான் தர விரும்பவில்லை!

தொகுப்பு: **அருண் சரண்யா**

## வி.ஐ.பி.க்கு வந்த கடிதம்

# மல்லிகைப் பூ

## காலம் இது

மல்லிகைப் பூ புனிதத் தனமை தந்து சமநிலையும் அளிக்கும் நறுமணத்தை முகர்வது அவசியம். இதனால் பூமியில் மறைந்து உள்ள அதன் சாரம் இரகசிய உண்மை நாம் கிரகித்துக் கொள்ள முடிகிறது.

—சிவமஹா புராணம்

---

மல்லிகைப் பூவினால் அர்ச்சனை செய்தால் எல்லா பாவங்களிலிருந்தும் விடுபடுவான்.

மலர்களை மாலைகளாக தொடுத்து பகவானுக்கு அர்ப்பணம் செய்வது மலர்களால் அர்ச்சிப்பதைவிட எண்ணற்ற மடங்கு பலன் தரும். ஒருவன் தன் சொந்த தோட்டத்திலிருந்து மலர்களை வந்து பகவானுக்கு அர்ப்பணித்தால் அடையும் பலன்களைவிட காட்டிலிருந்து சேகரித்த பூக்களால் அர்ச்சிப்பது மும்மடங்கு பலனைக் காட்டும்.

அக்னிப் புராணம்

---

அத்துடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்யவும்.

---



திருமண வைபவங்களுக்கு : சீர் முறுக்கு, சீர்முள்ளுத் தேன்குழல், தேன்குழல், சீர் அதிரசம், அப்பம், திரட்டுப்பால், பருப்புத்தேங்காய் வகைகள் முதலியவை செய்துத் தரப்படும்.

---

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை - 20.
போன் : 4915662, 4914213

Swathi

# சுஜாதா பக்கம்



தமிழ்ப் பத்திரிகைகளிடையே பொதுவாக ஏதாவது உண்டென்றால் கேள்வி - பதில் பகுதி தான். பத்திரிகை ஆரம்பித்து ஒரு வாரத்தில் இப் பகுதியைத் துவங்கவில்லையெனில் உடனே வாசகர் கடிதத்தில் கடிந்து கொள்வார்கள். எனவே ஜூனியர் பதில், சீனியர் பதில், ஜீனியஸ் பதில், பட்டப்பா பதில், கிட்டப்பா பதில், தமிழன் பதில், கிறுக்கன் பதில், அரசு பதில், சரசு பதில், இப்படிப் பலவற்றைப் பார்க்கிறோம். இவைகளை எம்ஃபில் ஆராய்ச்சிக்கு ஒருவர் எடுத்துக் கொண்டிருக்கிறார்.

இந்தப் பகுதிகளில் வரும் கேள்விகளைப் பொதுவாக நால்வகைப்படுத்தலாம் என்று ஒரு முறை நான் 'கணையாழியில்' எழுதியிருந்தேன். (கேள்வி கேட்பவர்களும் சுமார் நாற்பது பேர்தான் என்பது வேறு விஷயம்)

'ஒப்பிடுக' வகை. (சோவின் மொட்டையையும் ரஜனிகாந்த் மொட்டையையும் ஒப்பிடுக).

'உண்டா' வகை (ஆட்டோ ரிக்ஷாக்காரருடன் சண்டை போட்டதுண்டா?)

'பற்றி' வகை : (இந்தியன் பற்றி, பட்ஜெட் பற்றி, கூவம் நதி நாற்றம் பற்றி)

அண்மையில் நீங்கள் பார்த்த புத்தகம், உங்கள் மனம் கவர்ந்த - நெகிழ்ந்த சம்பவம் இப்படி உங்க ளுக்குத்தான் தெரியுமே - இது அண்மை வகை.

இந்த கேள்வி பதில்களில் என் குறை, சில கேள்விகளை யாருமே கேட்கமாட்டேன் என் கிறார்கள் என்பதே. எனவே நான் பரிந்துரைக்கும் கேள்விகள் சில :

1. டீவி. அறிவிப்பாளர்கள் ஏன் வார்த்தைக்கு வார்த்தை தலையாட்டுகிறார்கள்?

2. அமெரிக்க கான்ஸல் அருகில் காலை மூன்று மணிக்குச் சென்றிருக்கிறீர்களா?

3. மேடைப் பேச்சில் அவர்களே அவர்களே என்று மேடையில் அனைவரையும் பட்டியலிட்ட உடன் இத்துடன் என் சிற்றுரையை முடித்துக் கொள்கிறேன் என்று சொல்லலாமா?

4. பால்பாயிண்ட் பேனா எப்போதாவது கட்டி தட்டாமல் இருந்திருக்கிறதா?

5. தமிழ் நாடு ஊரும் பேரும் என்கிற ஏ.கே. செட்டியாரின் புத்தகம் எங்கு கிடைக்கும்?

6. டி. என். சேஷனும் சோம்நாத் சாட்டர்ஜியும் ஒரே மாதிரி பேசுகிறார்களே, கவனித்தீர்களா?

7. பாஷன் டிசைன் படிக்கும் ஆண்கள் ஒரு காதில் கடுக்கன் அணிய வேண்டியது அவசியமா?

8. எனக்கு ஒரு சிறு பத்திரிகை தொடர்ந்து இலவசமாக அனுப்பிக் கொண்டிருக் கிறார்கள். அதை எப்படி நிறுத்து வது?

9. டில்லி தொலைக்காட்சியில் மிலேஸுர் மேரா துமாரா என்கிற பாடலை ஒளிபரப்புவதை இந்த நூற்றாண்டுக்குள் நிறுத்திவிடுவார்களா?

10. புதுசாக வாங்கின டூத் பேஸ்ட் அட்டைப் பெட்டியை எந்தப்பக்கம் திறந்தாலும் உள்ளே உள்ள டியூப் தலைகீழாகத்தான் வருகிறதே, ஏன்?

11. பட்ஜெட் படிக்கும் நிதிமந்திரிகள் மீர்ஜா காலிப் கவிதை மேற்கோள் காட்ட வேண்டியது அவசியமா?

12. டில்லி உயர் அதிகாரிகள் தத்தம் மேசை மேல் உரை போட்டு வைத்திருக்கும் கணிப் பொறிகளை எப்போது பயன்படுத்துவார்கள்?

13. சியக்காய் ஷாம்புவுக்கு இலவச இணைப்பாக எப்போது உங்கள் பத்திரிகையைக் கொடுக்கப் போகிறீர்கள்?

14.அமெரிக்காவில் நான் வாங்கி வந்த 110 வோல்ட் மின் சாதனம் ஒன்று நம் ஊர் 220 வோல்ட் ப்ளக்கில் செருகினால் சரியாக வேலை செய்கிறதே அது எப்படி? ஆபத்தில்லையா?

15. இத்துடன் இணைக்கப்பட்டிருக்கும் என் ஜாதகத்தைப் பார்த்து எத்தனை தினம் பஸ் ஸ்டாண்டில் 23ஏ நிற்கும் என்று சொல்லவும்.

16. இரண்டாவது, ஜாதகர் உயிருடன் இருக் கிறாரா சொல்லவும்?

17. குண்டு பெண்கள் ஜீன்ஸ் அணியக் கூடாது என்று சட்டம் கொண்டு வந்தால் எதிர்ப்பார்களா?

18. சாட்டிலைட் டீவியில் அந்தப் பெண் ஏன் கையை கத்திக் கப்பல் பண்ணி குழந்தை போல் கொஞ்சிக் கொஞ்சிப் பேசுகிறாள்? அவளை யாரா வது கன்னம் கன்னமா இழைக்க மாட்டார்களோ?

19. தமிழில் ல, ள, ழ, மூன்று எழுத்துக்களும் ஒரே உச்சரிப்புக்கு வந்து விட்டது என்கிறேன். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

20. கல்கியில் சுஜாதா, கேள்வி பதில் பற்றி எழுதியிருந்ததை வாசித்தீர்களா?

(மீண்டும் அடுத்த வாரம்)

# கடலோரக் கொலைகள்

கதை : பெனிட்டோ குமார்

படம் : சசி

"தென்னிந்தியப் பெண்கள்" என்ற தலைப்பில் ஆராய்ச்சி நடத்துவதாகக் கூறிக் கொண்டு பிரதீப், மனைவி ஆஷாவுடனும் நண்பன் நாகராஜுடனும் உவரி கிராமத்துக்கு வர, அவர்களுக்கு உதவ முன் வந்த நந்தகோபால், எடுபிடி வேலைக்கு பரமகுருவை ஏற்பாடு செய்கிறான். ஒருநாள் காலை, பரமகுரு கொல்லப்பட்டதாகச் செய்தி...



5







...வீட்டிலே அரிசி, பருப்பு ஒண்ணும் இல்லே. சண்டை போட்டேன். கோவிச்சுக்கிட்டு 'மண்டபத்துக்குப் போய் காற்றாட தூங்கறேன்'னு கிளம்பினாரு... எந்தப் பாவியோ கொன்னுட்டானே...!


..., நாகராஜை விசாரித்தார் கோபி.
இரவு ஒன்பது மணிக்கு பரமகுரு வீட்டுக்குக் கிளம்பிப் போனான். அதான் தெரியும்.
நீங்க போகலாம். ஆனா என் உத்தரவு இல்லாம கிராமத்தை விட்டுப் புறப்படாதீங்க!


ஜாகைக்குத் திரும்பியதும்...
ஆஷா, கவலைப்படாதீங்க. வேற ஆள் ஏற்பாடு செய்யறேன். ரெண்டு நாளில் பிரதீப் மறுபடி ஆராய்ச்சி தொடங்கலாம்.
அது சரி, நீங்க எப்பவும் இவ்வளவு 'டிரிம்'மா எப்படி இருக்கீங்க?
ஹி...ஹி...


நந்து போனதும்...
ஆஷா, அவன்கிட்ட ரொம்பப் பேசறே! நம்ம திட்டத்தை உளறிடப் போறே!
அவன்கிட்டே ஒரு 'இது' மாதிரி நடிக்கிற, அவன் நம்பிக்கையைப் பெற. அப்படித்தானே ஆஷா!
ம்...
(தொடரும்)

# முத்துவேல் இண்டஸ்ட்ரீஸ்

(முத்துவேல் குரூப் நிறுவனங்கள்)

**பொது மக்களின் வேண்டுகோளை ஏற்று பிக்சட் டெபாசிட் திட்டம் மீண்டும் ஆரம்பிக்கப்படுகிறது.**

## ஆண்டுக்கு

உங்கள் பிக்சட் டெபாசிட்டுக்கு கணக்கிடப்படும் வட்டி விகிதம்

# 24%

குறைந்தபட்ச முதலீட்டுத் தொகை ரூ. 10,000/-

உங்கள் குமுலேட்டிவ் டெபாசிட்டுகளுக்கு முதிர்வு தொகை அட்டவணைப்படி அளிக்கப்படும்

| மாதங்கள் | ரூ. 10,000-க்கு முதிர்வு தொகை |
|---|---|
| 12 | 12,600 |
| 24 | 15,876 |
| 36 | 20,004 |
| 48 | 25,205 |
| 60 | 31,756 |

குறைந்தபட்ச டெபாசிட் ரூ. 10,000/-

- முதல் டெபாசிட்டிற்குதான் குறைந்தபட்ச தொகை. அதே பெயரில் மீண்டும் டெபாசிட் செய்தால் ரூ. 1000/- அதற்கு மேலும் அனுப்பலாம்.
- மக்கள் சேவையில் 49 ஆண்டுகள்.
- 75% வரை கடன் பெறும் வசதி.
- முதிர்வு தேதிக்கு முன்பே முழுத்தொகை தேவையானாலும் பெற்றுக்கொள்ளலாம்.
- முதிர்வு தேதிக்கு 10 தினங்கள் முன்னதாக நினைவூட்டுக் கடிதம் அனுப்பப்படும்.
- நம்பிக்கையும் துரித சேவையும் எமது தாரக மந்திரங்கள்.

வியாபார வளர்ச்சிக்கு கைராசியான சேவல் மார்க் பைல்களையே எப்போதும் உபயோகியுங்கள்.
**TAG FILE, CLIP FILE, LEVER FILE**
**COMPUTER FILE, FIBRE BOARD FILE, WRITING PAD.**




## MUTHUVEL INDUSTRIES

**Mfrs. of COCK BRAND OFFICE FILES**
**Angappa Chettiar Industrial Complex,**
20-A, Round Road, Post Box No. 32,
DINDIGUL - 624 001. TAMILNADU.
Ph: Off: (0451) 26850 & 27637.
Res : 26858 & 27011 Grams: COCKFILE

**உங்கள் முன்னேற்றமே எங்கள் வளர்ச்சி**

"ரிசர்வ் வங்கி சட்டம் அத்தியாயம் IIIC பிரிவு 45S-ன் கீழ் விதிக்கப்பட்டுள்ள வரம்புக்குட்பட்டு டெபாசிட்களைப் பெறுகிறோம்".

# புதிய ஊழல்



**வேதா கோபாலன்**

**நா**ன் கையைப் பிசைந்தேன். மனசு படபடத்தது. வியர்த்துப் போனது. கண்ணாடியில் நான் நானைப் பார்த்து... சே... என்னைப் பார்த்துக் கேலி செய்தது. பாருங்கள். வார்த்தை குழறுகிறது. அத்தனை குழப்பம். பதற்றம்.

இன்றைக்கு எப்படியாவது ராமநாதனின் புதிய ஊழலைக் கண்டுபிடித்தே தீர வேண்டும். அதனால் உனக்கென்ன லாபம் என்று கேட்கிறீர்களா? இல்லாமலா இத்தனை மெனக்கெடுவான் ஒரு மடையன்?

தலையைச் சொறிந்து யோசித்தேன். மண்டை காய்ந்ததே கண்ட பலன். என்ன செய்ய? என்ன செய்ய?

ஆங். சினிமாவில் 'ஸ்லோ மோஷனில்' காண்பிப்பார்களே. அப்படி ஒரு வேகம் என்னைத் தொற்றிக் கொண்டது. மேஜையின் இழுப்பறையில் பார்த்தேன். உதடு பிதுங்கியது தன்னிச்சையாய். காணோம். அதற்கான தடயம் எதுவும். ஒருவேளை அப்படி இருக்குமோ? வாரப் பத்திரிகைகளைத் தலைகீழாய்ப் புரட்டிப் போட்டதில், தேதி வாரியாய் இருந்த அவை, குப்பை வாரியம் போல் ஆகியதே மிச்சம். எங்கே? எனக்கு அது பற்றி ஒரு சின்ன 'க்ளு' கொடுப்பவருக்குப் பாதி ராஜ்ஜியம் கொடுக்கத் தயாராய் இருந்தேன். என்றைக்கேனும் எனக்கு முழு ராஜ்ஜியம் கிடைத்தால்.

சட்டென்று சினா லெண்டிங் லைப்ரரி நினைவுக்கு வந்தது. என் மனசில் ஒரு பளிச். "வருகிறேன் ராமநாதா... வருகிறேன்..." மனசுக்குள் கூவினேன். கரெக்ட். அப்படித்தான் இருக்க வேண்டும். இறைவா... என் ஊகத்தைப் பொய்யாக்கி விடாதே. நான் நினைத்தது மட்டும் சரியாக இருக்கட்டும். உனக்குத் தேங்காய்தான் போ. பிள்ளையாருக்கு ஆசை காட்டினேன்.

இன்றைக்கென்று பார்த்து லைப்ரரி லீவாய் இருந்து விடப் போகிறது என்று உள்ளூர பயம்தான். இருந்தாலும் பிள்ளையார் என் ஒற்றைத் தேங்காய்க்கு ஆசைப்பட்டு லைப்ரரியைத் திறந்து வைத்திருப்பார் என்று மனசோர நம்பிக்கை!

கடவுளே. வாழ்க்கையில் உயரப் போகும் ஒரே வாய்ப்பை நழுவும்படிச் செய்துவிடாதே. நான் கண்டுபிடித்தே ஆக வேண்டும். ப்ளீஸ். ப்ளீஸ்... இறைவனை இறைஞ்சியவாறு லைப்ரரியைத் தெருக்கோடியிலிருந்தே பார்த்தேன். அப்பாடா திறந்திருக்கிறது. இதுவே சகுனம் தான்.

**லை**ப்ரேரியனை அணுகினேன்.

"என்ன சார்..." அவர் எரிந்து விழுந்து புரிந்தும் புரியாத மாதிரி கேட்டேன்.

"சார்... ராமநாதன் எழுதின 'புதிய ஊழல்'ங்கற புத்தகம் இருக்கா? முந்தாநேத்தி கொண்டு போனேன். அதில் என் அப்பாயின்ட்மெண்ட் ஆர்டர் இருந்தது. கவனிக்காமல் எங்க வீட்டில் யாராவது திருப்பிக் கொடுத்திட்டாங்களோன்னு..."

## போட்டிக் கதை - 1

# வாழும் மனதிருக்கைகளாம்

இரமணாஸ்ரமம். அப்பா தியான மண்டபத்தில் இருப்பதாகச் சொன்னார்கள். காத்திருந்தாள் நிவேதிதா.

காத்திருத்தல்கள், சில சமயம் அவசியமானது. சில சமயம் எரிச்சல் ஊட்டக்கூடியது. நிவேதிதாவிற்கு காத்திருத்தல்கள் புதியவை அல்ல. மந்திரியின் வருகைக்காக, எம்.எல்.ஏ.யின் வருகைக்காக, சில சமயம் முதல்வரின் வருகைக்காக மணிக் கணக்கில் காத்திருந்திருக்கிறாள். தற்போது அப்பாவின் வருகைக்காகக் காத்திருப்பது சற்றே மாறுதலாய், பெரும் சுகமாக இருந்தது. எதிரே 'சும்மா' பரந்து விரிந்திருக்கும் அண்ணாமலை கூடுதல் சுகம் தந்தது.

நிவேதிதாவின் பார்வை மலை மீதிருந்த பல திருப்பங்களின் மீதும், அழகான வளைவுகளிலும் இருக்க, மனம் மட்டும் வாழ்வின் திருப்பங்கள் மீது.

நிவேதிதாவின் பள்ளி இறுதித் தேர்வில் முதல் திருப்பு முனை வந்தது. மாநிலத்தில் முதலாவதாகத் தேறியிருந்தாள். சந்தோஷப்பட அம்மா இல்லாது போனாள்.

அப்பா, சுமை கூடினாலும் கனம் தெரியாது சுமந்தார். ஆர்.கே. நியூக்லியர் பிஸிக்ஸ் பி.எச்.டி. முடிந்த கையோடு கல்பாக்கத்தில் தலைமை என்ஜீனியர் வேலை. வேலை நிமித்தமாக கம்ப்யூட்டர் பற்றித் தெரிந்து கொள்ள நேர்ந்த போது, முழுக் கவனமும் அதில் திரும்பியது. கம்ப்யூட்டரின் கன பரிமாணத்தைக் கண்டுணர்வது சற்றுக் கடினம். ஆர்.கே. கண்டுணர முயற்சித்தார். ஆபரேட்டிங் சிஸ்டத்திலிருந்து, ஆப்டிகல் பைபர் வரை. விளைவாய், சென்னையில் மிகப் பெரிய



திருவருணை சிவசு

கம்ப்யூட்டர் கன்சல்டன்சியின் உயர் பதவிக்கு மாறியாயிற்று.

வழிகாட்டுதல் என்பது மிகப் பெரிய விஷயம். இதுதான் வழியென்று சொல்வது கஷ்டம். 'இஷ்டப்படி செல்' என்பதும் வழி காட்டுதல் இல்லை. அம்மா இல்லாத பெண்ணுக்கு வழிகாட்டுதல் சிரமம்.

பெண்ணின் விருப்பு, வெறுப்பு அறிந்து வழிகாட்டினார் ஆர்.கே. பட்டப் படிப்புக்குப் பின் அண்ணா யூனிவர்சிடியில் கம்ப்யூட்டர் மேற்படிப்பு- எம்.சி.ஏக்கு செல்லுகையில் பெண்ணை உச்சிமோர்ந்து கேட்டார்.

"நிவேதி, அப்பா இருக்கிற துறையிலதான் பெண்ணும் பிரகாசிக்கணும்கிறது இல்லை..."

பதிலாய் நிவேதிதா ஒரு கடிதம் காண்பித்தாள். கம்ப்யூட்டர் மாதப் பத்திரிகை ஒன்றில் அவள் எழுதி வெளிவர இருக்கும் கட்டுரை. ஆணைத் தொடர் சம்பந்தமாக சில சிக்கலான வினாக்களுக்கு விடையிருந்தது கட்டுரையில்.

"சரிம்மா. ஆனா, அதுக்காக யு.எஸ். போய் செட்டிலாகிற எண்ணம் மட்டும் வேணாம்மா..." என்றார்.

எம்.சி.ஏ. முடித்த கையோடு டாடா கன்சல்டன்சியின் வேலைக்கான உத்தரவுக் கடிதம் வந்தது. கூடவே இன்னுமொரு அரசாங்க கவர். ஐ.ஏ.எஸ். தேர்வில் தேசிய அளவில் மூன்றாவதாக வந்திருந்தாள்.

ஒருநாள் முழுக்க யோசித்தார்கள் தகப்பனும் பெண்ணும். ஒரு முடிவுக்கு வர வில்லை.

நிலவொளியில் மலை சுற்றும் பாதையில் அப்பாவும் பெண்ணும்.

"நிவேதிதா. கம்ப்யூட்டர் கம்பெனிக்கு உன்னைப் போல ஆள் கிடைக்கிறது சிரமம் இல்லை. நம்ம





**நம்** ஊரில், பிளாட்பாரத்தில், கடவுள் உருவங்களைத் தீட்டி வைப்பதும், அதைப் பார்த்துவிட்டு, நாம் காசு போடுவதும் வழக்கம். அதைப்போல், பிரேசில் நாட்டில் ரியோ-டி-ஜெனிரோ நகரில் உள்ள கடற்கரையில் இந்த இளைஞர், மணலில் கோட்டை கட்டுகிறார். மக்கள், மணற்கோட்டையை ரசித்துவிட்டுக் கொடுக்கிற பணம்தான் இவருக்கு வயிற்றுப் பிழைப்பு.

—எஸ்.ஸி.

இரண்டு பேருக்குமே பணம் குறியில்லை. என்னோட புத்தகங்களோட ராயல்டியே போதும். ஆனா நீ ஐ.ஏ.எஸ். முடிச்சுட்டு கலெக்டரா வந்தா நிறைய செய்வேன்னு தோணுதும்மா..."

அவள் அப்பாவிற்குக் கட்டுப்பட்டாள். பயிற்சிக்கு, பஞ்சாபுக்குப் போனாள்.

**ஆர்**.கே. பணியிலிருந்து விடுபடும் வயது வந்தாலும், இன்னொரு புதிய பதவி தந்து வைத்துக் கொள்ள முயன்றது அந்த நிறுவனம்.

"இல்ல... போறும்... நான் வர்றேன்..." என்று சொல்லி விட்டார். சொல்லி இரண்டு மாதம் இருக்கும். செழிப்பான அந்த மாவட்டத்துக்கு கலெக்ட்ராக நியமனம் வந்தது, நிவேதிதாவிற்கு.

"நிவேதி, நீ மட்டும் புதிய இடத்துக்கு போம்மா. கூடவே நம்ம சமையல் மாமியை வெச்சுக்கோ. எனக்குள்ள நான் யார்னு தேடற சமயம் இது. அதுக்கு உன்னோட ஒட்டம் சரியா வராது. இப்போதைக்கு எனக்குச் சரியான இடம் ரமணாஸ்ரமம்தான்..."

மௌனமாக அப்பாவைப் பார்த்தாள் நிவேதிதா. பார்வையில் பிரிவு தெரிந்தாலும் அப்பாவின் எண்ணத்திற்குக் குறுக்கே நிற்கவில்லை.

கண்டிப்பும் கருணையும் அதே சமயம் ஆணவமும் பிடிவாதமும் இல்லாத ஒரு கலெக்டரை அந்த மாவட்டம் முதன் முதலாக சந்தித்தது. டிரைவர் தாணுவைக் கூட மரியாதையோடு கூப்பிடுவதை ஆச்சர்யத்தோடு பார்த்தது, கலெக்டர் அலுவலகம். ஆச்சர்யம் ரொம்ப நாள் நீடிக்கவில்லை.

தன்னிடம் இருப்பதைப் பிறரிடமும் எதிர்பார்ப்பது மனிதம். நேர்மையையும், கண்ணியத்தையும் பிறரிடமும் எதிர்பார்த்தாள் நிவேதிதா. அவளின் எதிர்பார்ப்புகளுக்கு அப்பாற்பட்டவர்களாக இருந்தனர் ஊர் அரசியல்வாதிகள்.

செழிப்பான அந்த மாவட்டத்தின் நெல்லெல்லாம் அரசாங்க கிடங்குக்குப் போகாமல் ஒரு தனியார் மில்லுக்குப் போவதை அறிந்தாள் நிவேதிதா. மில்லுக்கு சீல் வைத்து, அரசாங்கத்திற்கு ஓர் அறிக்கை அனுப்ப, பரிசாய் மாறுதல் உத்தரவு வந்தது!

மாற்றம் இடத்திற்கு மட்டும்தான். மனதிற்கோ, நிவேதிதாவின் செயல்களுக்கோ அல்ல. ஒரு வருட இடைவெளியில் மூன்று இடம் மாறியாயிற்று. இதோ இப்போது இந்த பின்தங்கிய மாவட்டம் வந்து மூன்று மாதம் ஆகிறது.

**நி**வேதிதாவின் வரவு ஆளும் கட்சியினருக்கு அதிர்ச்சியாக இருந்தது. எம்.எல்.ஏ.வின் ஏ.சி. தியேட்டரின் லைசென்சை கேன்சல் செய்த முதல் கலெக்டர் நிவேதிதாவாகத்தான் இருக்க முடியும். அளவுக்கு அதிகமாகக் கட்டணம் வசூல் செய்தது தியேட்டர்.

'மாறுதல் நிச்சயம்' என்று பேசிக் கொண்டார்கள். அதுவும் அந்த விபத்து நேர்ந்த பிறகு! ஊருக்கு வெளியே இணைப்பாய் இருந்தது அந்தப் புதிய பாலம். பாலத்தைக் கட்டியது ஆளும்கட்சியின் செயலாளர். கட்டுமானப் பணியில் ஊழலால் பாலம் வலுவற்றதாக இருக்க, ஒருநாள் பயணிகளுடன் கூடிய பஸ் விழுந்தது.

காண்ட்ராக்டரின் மேல்தான் குற்றம் என்றும், உறுதியான நடவடிக்கையும் நஷ்டஈடும் அவர்தான் தரவேண்டும் என்றும் குறிப்பெழுத, விவகாரம் விவாதமானது சட்டசபையில்.

நிவேதிதா நிலைகொள்ளாமல் இருந்தாள். உருப்படியாக ஏதும் செய்யாமல், இப்படி ஊர் ஊராகச் செல்வதில் என்ன அர்த்தம் என்ற நினைவு அடிக்கடி எழ ஆரம்பித்து விட்டது. செழிப்பிலோ, செல்வத்திலோ குறையில்லாத தான் இப்படி அல்லல் பட வேண்டுமா என்ற எண்ணம் மேலோங்கி விட்டது நிவேதிதாவிற்கு. கலெக்டர் வேலையை உதறி விடலாமா என்று யோசிக்க ஆரம்பித்தாள். விளைவு இப்போது ஆஸ்ரமத்தில் இருக்கிறாள்.

தியான மண்டபம் விட்டு வெளியே வந்த ஆர்.கே., வெளியில் நிவேதிதா இருப்பதை அறிந்து, ஆவலாய் பின்பக்கம் சென்று பரிவுடன் தொட்டார், பெண்ணை.

"என்னம்மா... திடீர்னு.. நாளைக்கு ரமண ரோட ஆராதனை. பார்த்துட்டுப் போகலாம்ல?"

"போற மாதிரி இல்லப்பா..."

"என்னம்மா சொல்றே?"

நிவேதிதாவின் அனைத்து மாறுதல்களையும் அறிந்தவர்தான் ஆர்.கே. கூடவே நிவேதிதாவின் தெளிவான சிந்தனைகளையும் அறிந்தவர் என்பதனால் அதிக முக்கியத்துவம் தரவில்லை, எந்த செய்திகளுக்கும்.

எந்த பாவனையும் காட்டாமல் பெண் சொன்னதை கவனமாகக் கேட்டுக் கொண்டார் ஆர்.கே.

மறுநாள் ஆராதனை. நிரம்ப கூட்டம். "இங்க ஆராதனைக்கு நல்ல சாப்பாடு உண்டும்மா... ஆனா என்னோட வழக்கம் வேற. ராத்திரி வரைக்கும் விரதம். முடிஞ்சா இருந்து பாரேன் நீயேன்..."

"வழக்கமில்லையேப்பா..."

"சும்மா இருந்து பாரேன். பட்டினி இருக்கிறது கூட ஒரு சுகம்தாம்மா."

'சரி' என்றாள் நிவேதிதா. இதுவரை பட்டினி என்றால் என்னவென்றே அறியாத நிவேதிதா. கேம்ப் போனால் கூட கையோடு சமையல் மாமியின் சாப்பாடு போகும். பூஜைக்குப் பின் பசி கூடியது.

"எப்படிப்பா... உங்களால பட்டினி இருக்க முடியுது?"

"கஷ்டமில்லம்மா. பழகிட்டா சரியாயிடும்."

மாலை பூஜைக்கு சென்றவர் கையில் மாலைப் பத்திரிகையுடன் திரும்பினார்.

"உன்னோட மாவட்டச் செய்தி தலைப்பா வந்திருக்கும்மா."

"என்னோட மாறுதல் உத்தரவாப்பா.."

"இல்லம்மா.. பட்டினிக்கு ஒரு குடும்பமே பலின்னு..."

"என்னப்பா சொல்றீங்க? நாம இருக்கிறது இந்தியா. எத்தியோப்பியா இல்லை!"

"தமிழ்நாட்டுல உன்னோட மாவட்டம் ஒரு எத்தியோப்பியா மாதிரின்னு தெரியாதாம்மா...?"

"பட்டினியால் சாவா, நிஜமா?" பேப்பரை நடுக்கத்துடன் வாங்கிப் பார்த்தாள். காலையி லிருந்து பட்டினி என்பதனால் கூடுதல் நடுக்கம்.

"நிஜம்தாம்மா நிவேதி. இன்னமும் இந்தியாவிலே ஒருவேளை சோத்துக்கு கஷ்டப்படற ஜனங்க இருக்கிறது நிஜம்மா. இங்க ஆஸ்ரமத்தில பகல்ல ஏழைகளுக்கு அன்னதானம் உண்டு. தினம், தினம் ஒரு புது முகம் பார்க்கறேம்மா."

நிவேதிதா மௌனமாக இருந்தாள். அப்பாவே தொடர்ந்தார்.

"போம்மா, போ உன்னோட இடத்துக்குப் போ. நான் இங்க எப்படி ஒரு யோகி கணக்கா இருக்கிறேனோ அது மாதிரிதான் நீயும். கஷ்டம் யாருக்கு இல்ல? எங்க இல்ல? உன்னோட வேலையே மத்தவங்களோட கஷ்டங்களைத் துடைக்கிறதுதான். அதில உன்னோட கஷ்ட நஷ்டங்களைப் பார்க்காதே.

## அமைச்சர்களை அதிகம் பெற்ற மாநிலம்

தேவகௌடா மந்திரி சபையில் பிரதிநிதித்துவம் உள்ள மாநிலங்கள்:11. பிரதிநிதித்துவம் இல்லாத மாநிலங்கள் : 14. அமைச்சர்களை அதிகம் பெற்ற மாநிலம் பீகார். மாநில வாரியாக அமைச்சர்கள்:

பீகார் - 9, தமிழ்நாடு - 8, உ.பி. - 5, கர்நாடகா - 4, ஆந்திரா - 4, ஒரிசா -2, அஸ்ஸாம் - 2, பஞ்சாப்- 1, ராஜஸ்தான் - 1, கோவா - 1, மே.வங்காளம் - 1,

மொத்தம் 38.

- எம்.எஸ். குமார்.

அரசியல்வாதிங்க மாறிக்கிட்டே இருப்பாங்க. நீ அது மாதிரி இல்ல...?"

"இல்லப்பா நானும் ஒரு இலட்சியத் தோடதான் இருந்தேன். ஆனா."

"நிஜம்தாம்மா. யாரை எங்கு அனுப் பனும்னு ஆண்டவனுக்குத் தெரியும்மா..."

"ஆனரவங்களுக்கு தெரியலையேப்பா."

"பரவாயில்லை. உனக்கு ரமணரோட அட்சர மணமாலை வரி ஞாபகம் இருக்கா? லட்சியத்தை பத்தி?"

"லட்சியம் வைத்தருள் அஸ்திரம் விட் டெனை
பட்சித்தான் பிராணனோடு அருணா சலா..."

என்றாள் நிவேதிதா.

"ஆமாம்மா... அதுதான். நீ வெறும் அஸ்திரம் இல்லை, பிரம்மாஸ்திரம்... உனக்கு ஜெயம் நிச்சயம்மா!"

உ

நிவேதிதா கிளம்பிப் போனாள். அடுத்த இரு வாரம் கலெக்டர் அலுவலகம் அமளி துமளிப்பட்டது. பட்டினி சாவு இல்லை யென்றும், வெறும் வயிற்றுப்போக்கு என்றும் பொய் சொல்லச் சொன்னது அரசு. முதன் முறையாகப் பொய் சொன்னாள். நிலை மையை மாற்றிக் காண்பிக்க வேண்டும் என்ற உந்துதல் பொய் சொல்லத் தூண்டியது.

அனைத்து அலுவலர்களையும் ஒன்று கூட்டினாள்.

"புதுசா நான் ஒரு முயற்சியில இறங்கப் போறேன். எனக்கு உங்களோட உதவி வேணும்."

"அவசியம் உதவறோம் மேடம்" என் றார்கள்.

"நம்ம மாவட்டம் வறட்சியான மாவட் டம்தான். ஆனா பட்டினியால மனுஷங்க சாகற அளவுக்கு வறட்சி இருக்கும்னா, அதுக்கு நாமதான் காரணம். நாம நினைச்சா நிலைமையைத் தலைகீழா மாத்திடலாம். நீங்க எல்லா வகையிலும் உதவணும்."

மாவட்டம் முழுதும் அலைந்தாள். பல பெரிய மனிதர்களிலிருந்து, கிராமத்து விவ சாயி வரை பலரை நேரடியாகச் சந்தித்தாள். தரிசு நிலத்திலிருந்து, நன்செய் நிலம் வரை பல விவரங்களைச் சேகரித்தாள். நீர்வளம் குறித்து பல செய்திகளைச் சேகரித்தாள். ஒவ் வொரு விவரமும் கணிப்பொறிக்குச் சென்றது.

பல்வேறுவிதமான, பல கோணங்களில் பெற்ற விவரங்களைத் தகவல்களாகத் தந்தது கம்ப்யூட்டர். கொஞ்சம் கொஞ்சமாக தனது சிந்தனைக்குப் பல்வேறு மட்டங்களில் மாவட் டம் முழுவதும் வலு கூடுவது தெரிந்தது.

கம்ப்யூட்டரில் மாவட்டத்தின் வரைபடம் ஸ்கேன் செய்து புகுத்தியிருந்தாள். மௌஸ் பட்டனை நகர்த்திக் கொண்டிருக்க, பின்னே நிழலாடியது.

சமையல் மாமி நின்றிருந்தாள்.

"என்ன மாமி, நீங்க போய்த் தூங்குங்க. எனக்கு இன்னும் கொஞ்சம் வேலை இருக்கு. முடிச்சிட்டுப் படுத்துக்கிறேன்..."

"இல்ல, நிவேதி... போன மூணு வாரமா நீ ராத்திரியில சாப்பிடறதில்லை. பால் கூட வேணாம்கிற. அமாவாசைக்குக் கூட விரதம் இருந்தவ இல்ல. உன்னோட அம்மா திதிக்கு கூட அப்பா உனக்குத் தனியா காலைல டிபன் தரச் சொல்லிடுவார். ஆனா..."

"இருக்கட்டும்; பரவாயில்லை மாமி. நான் ராத்திரியில சாப்பிடறதில்லைன்னு முடிவு பண்ணியிருக்கேன். என்னோட இலட்சியத் துல வெற்றி பெறணும்னா எனக்கு பட்டினியோட அருமை தெரியணும். அது மட்டுமல்ல, பட்டினியிருந்தா ராத்திரியில கண் முழிச்சு வேலை செய்ய முடியுது. எனக்கு நம்பிக்கை இருக்கு மாமி. என்னோட இலட் சியம் நிறைவேறும்னு..." சொல்லிவிட்டு கம்ப்யூட்டரை இயக்கத் துவங்கினாள்.



"உன்னால் முடியும்கிற நம்பிக்கையை வளர்த்துக் கிட்டா எதையும் சாதிக்க லாம்!"

''காப்பி சூடாவே இல்லையே?''

''விளையாடாதீங்க சார். என் கட்டை விரலே பொறிஞ்சு போச்சு. அவ்வளவு சூடு!''

— குல்லூ



# ஜாலி போட்டி – 5

## பரிசு ரூ. 5000/-

## சமர்த்தாக மாறிவிட்டார் ஜெயலலிதா!

அ.தி.மு.க. செயற்குழுக் கூட்டத்தில் முன்னாள் முதல்வர் பேசியதையும் விடுத்த அறிக்கையையும் கேட்டு மயக்கமே வந்து விட்டது இல்லையா? இப்போது மயக்கம் தெளிந்த நிலையில், ஜெ. சொன்னதை நினைவூட்டிக் கொள்ளுங்கள். கட்டங்களை நிரப்புங்கள். இந்த வார ஜாலி போட்டி இதுதான்.

கூப்பனை நிரப்பி, 9.9.96க்குள் அனுப்புங்கள். சரியான விடை எழுதுகிற ஒருவருக்குப் பரிசு ரூ. 5000/-. பலர் சரியாகச் செய்தால் குலுக்கல் முறையில் ஒருவர் தேர்ந்தெடுக்கப்படுவார். ஆசிரியர் தீர்ப்பே இறுதி. ரெடி, ஸ்டார்ட்!

### ஜாலி போட்டி - 6

1. ஜெ. உங்களுக்கு இதுவாக இருப்பார் :

| | கோ | | | | க |
|---|---|---|---|---|---|

2. அல்லது, இதுவாக இருப்பார் :

| | யா | |
|---|---|---|

3. ஆலோசனைகள், புகார்களை இனி :

| | | வே | | | ர் |
|---|---|---|---|---|---|

4. விரைவில் இதைக் கூட்டுவார் :

| பொ | | | கு | |
|---|---|---|---|---|

5. இதை மீட்டுத் தருவார் :

| | ஜி | | | ட் | |
|---|---|---|---|---|---|

6. தான் இதற்கு மட்டும் சொந்தமல்ல என்றார்:

| | ரு |
|---|---|

| | | ம | | | து | | |
|---|---|---|---|---|---|---|---|

7. அ.தி.மு.க. தன்னை இதில் ஈடுபடுத்திக் கொண்டுள்ளது என்றார்:

| அ | | | ப் | | | | ச | | | ல் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|

8. தம் அரசு செய்யவிருந்த இந்த உயரிய பணியை தி.மு.க. அரசு நிறுத்திவைத்ததைக் கண்டிக்கிறார் :

| உ | | | த் | | | | | | ங் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|

பெயர் : ..............................................................

முகவரி : ..............................................................

..............................................................

# திருமுருகா ரியல் எஸ்டேட் – பைனான்ஸ் மற்றும் தொகுப்பு நிறுவனங்கள்

73, ரங்கநாதன் தெரு, வி.கே.கே. டிரேட் சென்டர், 2வது மாடி, தி. நகர்,
சென்னை-17. போன்: 4347833/6260079.

கிளை: H-58/59 South Extension Part I, P.S. House, புது டெல்லி - 110 049. போன்: 4644179.

ரூ.10,000/-
1 வருட டெபாசிட்
செய்பவர்களுக்கு சிறப்பு
ஊக்கத்தொகையாக (Incentive)
25.9.96 வரை
ஒரு கிராம் தங்க நாணயம்
(1gm Gold Coin)
வழங்கப்படும்.

ரூ.5000/-
ஒரு வருட
டெபாசிட்
செய்பவர்களுக்கு
ஒரு (Wall Clock)
சுவர் கடிகாரம்
வழங்கப்படும்.



| காலம் | குறைந்த பட்ச டெபாசிட் | வட்டி | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| 3 மாதம் | ரூ. 5000 | 24% | 2% |
| 6 மாதம் | ரூ. 5000 | 26% | 3% |
| 9 மாதம் | ரூ. 5000 | 28% | 4% |
| ஒரு ஆண்டும் அதற்கு மேலும் | ரூ. 5000 | 30% | 6% |

**திருமுருகா :** பக்கத்து வீட்டுக்காரர் ரூ. 10 கைமாத்து கேட்டால் கொடுக்கிறீங்களா! எவ்வளவு யோசிக்கிறீங்க சார்.

**பொதுஜனம் :** அதற்கு என்னையா இப்போ. அதுக்காக உங்ககிட்டே டெபாசிட் செய்தால் எப்படி பாதுகாப்பு (Safety) ஆகும்.

**திருமுருகா :**

(1) திருமுருகா நிறுவனத்திற்கு கோடிக்கணக்கான சொத்துக்கள் உள்ளது

(2) டிபாசிட்தாரர் என்று வேண்டுமானாலும் டிபாசிட் தொகையில் 75% உடனடி கடனாக பெறலாம். தவிர்க்க முடியாத காரணம் இருப்பின் டிபாசிட் முதிர்ச்சி ஆவதற்கு முன்பே ஊக்கத் தொகையும், ஒரு சிறிய செலவு தொகையும் பிடித்துக்கொண்டு பணத்தை திருப்பி கொடுக்கிறோம்.

(3) 29.09.96 குலுக்கலில் உங்களுக்காக 50 பரிசுகள் காத்திருக்கிறது.

(4) திருமுருகா Fibre-Glass Industry, Heat Treatment Industry, Netlon Agency, வீட்டுமனை விற்பனை வியாபாரமாக நடக்கிறது.

(5) விருப்ப ஓய்வு பெற்ற அரசு அதிகாரியால் நடத்தப்படுகிறது.



# செய்திகள், வாசிப்பது செம்பியன்...

சினிமா தியேட்டர்களில் டிக்கெட் கட்டணங்களை இஷ்டத்துக்கு அதிகரிக்க அ.தி.மு.க. அரசு அனுமதித்தது. காரணம், வழக்கமான ல.லா-தான்! இதன் விளைவாக 'நாம் இருவர் நமக்கொருவர்' குடும்பம் கூட ஒரு சினிமா பார்த்து வர, குறைந்தபட்சம் ரூ. 100/- செலவு செய்ய வேண்டியதாயிற்று. இந்த நிலையை மாற்ற தி.மு.க. அரசு முன்வந்திருப்பதை மக்கள் வரவேற்பார்கள். முன்பிருந்ததை விடவும் கட்டணங்களை சிறிது அதிகரித்து நிர்ணயித்தாலும் பாதகமில்லை; ஆனால் தியேட்டர் பராமரிப்பில், குறிப்பாக சுகாதாரத்தில் கண்டிப்புக்காட்ட வேண்டும். கழிப்பறைகள் சுத்தமாக இருப்பதுடன், படம் ஆரம்பித்து ரசிகர்கள் மனம் சினிமாவில் லயித்ததும் தந்திரமாக ஏ.ஸியை அணைத்து விடுகிற கொடுமை ஒழிய வேண்டும். நோய் தொற்றுக்கு மிகச் சுலபமான வழிவகுப்பது ஏ.ஸி. இயங்காத ஏஸி தியேட்டர். மேலும் ஒரு முக்கிய அம்சம், ஏ.ஸி. தியேட்டரில் ஒரு கதவு தவிர மற்றவை திறந்து மூடப்படுவதே இல்லை. இதனால் கதவுகள் இறுகிக் கொள்கிற வாய்ப்பு உண்டு. ஒரு அபாயம், ஆபத்து என்றால் கதவுகளைத் திறக்க முடியாமல் போக, மக்கள் சீக்கிரமாக வெளியேறுவது தடைப்படும். எச்சரிக்கை தேவை.

முதல்வரைச் சுற்றி ஓரிரு ஒட்டுப்புல்லு அமைச்சர்கள் உள்ளனர். முதல்வர் எங்கே போனாலும் காரில் அவர் அருகே ஏறிக் கொள்வார்கள்; மேடையில் தோன்றுவார்கள்; முதல்வர் வீட்டில் இருப்பார்கள்; காரியாலயத்திலும் காணப்படுவார்கள். இந்த அமைச்சர்களுக்குத் தங்கள் துறையைக் கவனிக்க அவகாசம் வேண்டாமோ என்று எண்ணத் தோன்றுகிறது. நாலு இடங்களுக்குப் போய்வரும்போது முதல்வருக்கு பேச்சுத் துணை அவசியமாக இருக்கலாம். அது ஒரே நபராக இருப்பதை விட, பல்வேறு அமைச்சர்களாக இருந்தால் முதல்வருக்கும் நல்லது; அமைச்சர்களும் அவரிடமிருந்து பல விஷயங்கள் கற்றுக் கொள்ள வாய்ப்பாக இருக்கும். ஓர் உடன்பிறவா சகோதரர் உருவாவதைத் தொடக்கத்திலேயே தவிர்த்து விடலாம்.

ஆகஸ்டு 20 ராஜீவ் சமாதியில் பிரார்த்தனைக்குக் கூடி தலைவர்கள் தரையில் அமர அவஸ்தைப்பட்டதைப் பார்க்க பரிதாபமாக இருந்தது. தேவேகௌடாவும் சரி, ராவும் சரி தவித்துப் போனார்கள். சர்மாவின் சரீரத் தடுமாற்றங்கள் அனைவரும் அறிந்ததே. காந்தி, நேரு, இந்திரா போன்றோரின் சமாதிகளில் அஞ்சலி செலுத்த வரும் தலைவர்கள் தரையில்தான் அமர வேண்டும் என்ற பழக்கம் ஏன், எதற்காக ஏற்பட்டது? நாற்காலி போட்டு அமர்ந்தால் என்ன குடிமுழுகிப் போய் விடும்? உண்மையில் உடல் வசதியான நிலையில் இருந்தால்தான் மனம் ஒன்றுபட்டு தியானத்தில் ஆழ முடியும். காலோ கையோ இழுத்து, வலித்துக் கொண்டிருந்தால் எப்படிப் பிரார்த்தனையில் மனம் லயிக்கும்? தலைவர்களின் இந்த பஸ்கி பயிற்சி தேவையற்றது; முடிவு கட்டலாம்.

கூவம், பக்கிங்ஹாம் கால்வாய்ப் பக்கம் தமிழக அரசின் கவனம் மறுபடி திசை திருப்பப்படுகிறது. ஏற்கெனவே ஒரு தடவை கூவத்தில் ஆழம் தெரியாமல் காலை விட்டு கெட்ட பெயர் சம்பாதித்துக் கொண்டிருக்கிறது, தி.மு.க. அரசு. முதலில் பாதாளச் சாக்கடைக் கழிவுகள் கூவத்தில் கலக்காமல் புறநகருக்குக் கொண்டு செல்லப்பட்டு, ஏகாந்த இடத்தில் உரத் தயாரிப்புக்கு ஆலை நிறுவ வேண்டும். ஆடு, மாடு, பன்றி, நாய் முதலானவை நகரிலிருந்து வெளியேற்றப்பட்டு பண்ணைகள் உருவாக வேண்டும். பாதாளச் சாக்கடைகளை மேம்படுத்த வேண்டும். கூவத்தில் நிரந்தர நீரோட்டத்துக்கு வழி செய்ய வேண்டும். இதையெல்லாம் கவனிக்காமல் கூவத்தின் துர்நாற்றம் நீக்கி, மேம்படுத்துகிறேன் என்று ஆரம்பித்தால், சென்னையை அழகுபடுத்தும் திட்டம் அரசை அழவைத்து விடும்!

## மனசுல இருந்தது; கொட்டிட்டேன் :

'படித்த பெண்களுக்கு எங்கள் கட்சியின் சார்பில் போட்டியிட வாய்ப்புக் கொடுக்கிறோம்' என்று எம்.ஜி.ஆர் அறிவித்திருந்தார். அது 1977 ஆம் ஆண்டு....

நான் எம்.ஜி.ஆர் படங்களைப் பார்த்ததில்லை. அ.தி.மு.க.விலும் உறுப்பினராக இல்லை. சமூக சேவை செய்ய நாட்டம் இருந்ததால், சட்டமன்ற வேட்பாளராக நிற்க ஸீட் கேட்டு மனு செய்தேன். எம்.ஜி.ஆர் ஸீட் கொடுத்து விட்டார்! மொடக்குறிச்சியில் நின்று வெற்றி பெற்றேன்.

அதன் பின்னர் ஒரு வருடம் கழித்து, அமைச்சர் பொறுப்பையும் கொடுத்தார், எம்.ஜி.ஆர். என்னிடம் மிகுந்த அன்புடன் இருந்தார்.

1980 ஆம் ஆண்டு பாராளுமன்றத் தேர்தலில் அ.தி.மு.க. படுதோல்வி அடைந்தது. நாஞ்சில் மனோகரன் தி.மு.கவில் சேர்ந்துவிட்டார். தொடர்ந்து 'நானும் தி.மு.க.விற்குப் போய்விடுவேன்' என்று முத்துசாமி போன்றோர் எம்.ஜி.ஆரிடம் போகப்போகிறாய் என்று சொல்கிறார்களே' எனக் கேட்டார். 'என்னை அங்கீகரித்து சட்டமன்ற உறுப்பினராக, அமைச்சராவும்



— சுப்புலட்சுமி ஜகதீசன்

**என்னை, வெளியே வேவு பார்த்துக் கொண்டிருந்தார்கள்...**

நியமித்துள்ள உங்களுக்குத் துரோகம் செய்யும் எண்ணம் எனக்கில்லை' என்று எவ்வளவோ சொல்லியும் அவர் நம்பவில்லை.

என்னை வேவு பார்க்க ஆஸ்பத்திரியைச் சுற்றி ஆட்கள் போடப்பட்டனர். அந்தத் தனியார் ஆஸ்பத்திரி டாக்டர் எனக்குச் சிகிச்சை தரக் கூடாதென்று 'அன்புடன்' மிரட்டப்பட்டார். எம்.ஜி.ஆருக்கு வேண்டிய சில கலையுலகப் பெரிய மனிதர்கள் வேறு அடிக்கடி வந்து எனக்கு புத்திமதி சொன்னார்கள்.

எனக்கு அறுவைச் சிகிச்சை செய்த இடத்தில் செப்டிக் ஆகி ரொம்பவும்

சொல்லி வைத்திருந்தார்கள். அந்த சமயம் பார்த்து எனக்குக் கடுமையான வயிற்று வலி வந்து, தனியார் மருத்துவமனை ஒன்றில் சேர்ந்து விட்டேன். அபெண்டிஸைடிஸ் அறுவை சிகிச்சையும் நடந்தது.

ஆஸ்பத்திரிக்கு வந்து பார்த்துவிட்டுப் போனது மட்டுமல்லாமல் எம்.ஜி.ஆர், தொலைபேசியில், 'கட்சியைவிட்டுப்

சிக்கலாகி விட்டது. படுத்த படுக்கையாக இருக்க வேண்டிய கட்டாயம். டாக்டருக்கோ, என்னை வெளியேற்ற வேண்டி அழுத்தம்.

**சா**லையிலிருந்து நான் சிகிச்சை எடுத்துக் கொண்டிருந்த அறை தெரியும். ஆள் படுத்திருப்பது போல் செட்அப் செய்துவிட்டு ஒரு நாள் இரவு, டாக்டரின் ஒத்துழைப்புடன் ஸ்டெச்சரில் படுக்க வைத்து, என்னை மருத்துவமனையின் பின்புறமாக அழைத்து வந்து காரில் ஏற்றி ரகசியமாக கோவை செழியன் வீட்டிற்கு அழைத்து வந்து விட்டார் என் கணவர்.

எங்களுக்குச் சென்னையில் மிகவும் வேண்டியவராக இருந்தவர் அவர் ஒருவர்தான். அறுவைச் சிகிச்சையால் உண்டான காயம் ஆறாததால் ஏற்பட்ட உடல் வேதனை ஒரு பக்கம். என்னை நம்பாமல் மன ரீதியாக எனக்குக் கொடுக்கப்பட்ட உபாதைகள் மற்றொருபுறம். 'சே, இந்த அரசியலே வேண்டாம், ஊருக்குப் போய் மறுபடி ஆசிரியையாகவே பணிபுரிவதுதான் சிறந்தது' என்று நான் தீர்மானித்து, கணவரிடம் கூடச் சொல்லிவிட்டேன்.

அதற்குள் கோவை செழியன் கலைஞருக்கு போன் செய்து பேசினார்.

"சுப்புலட்சுமியை தைரியமாக இருக்கச் சொல்லுங்கள். நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று கலைஞர் நம்பிக்கை டானிக் கொடுத்தது மட்டுமல்லாமல், மறுநாள் கழக முக்கியஸ்தர்களை அனுப்பி தைரியமாக இருக்கச் சொன்னார். இதற்காக மனம் வெறுத்து அரசியலை விட வேண்டியதில்லை' என்று எடுத்துச் சொன்னார்கள் அவர்கள். பெண்ணென்றும் பாராமல் தலைமைக்கு துரோகம் செய்யும் எண்ணம் எனக்கில்லை என்று பலமுறை எடுத்துச் சொல்லியும் நம்பாமல் ஒரு பாதுகாப்பற்ற நிலைக்கு நான் தள்ளப்பட்டபோது, அரவணைத்துக் காத்த கலைஞரின் தலைமையில் சேருவது என்று உடனே முடிவு செய்தேன்.

அன்றிலிருந்து கழகத்தில்தான் இருக்கிறேன். நான் தி.மு.கவில் இணைவதற்குக் காரணமான அந்தச் சம்பவம் அதிகமாக வெளியாருக்குத் தெரியாது. இது நாள் வரை என் மனதிலேயே பொத்திவைத்த விஷயம் அது!

சந்திப்பு : **ப்ரியன்**

படம் : **பேஜர் கே. மூர்த்தி**



"உங்க பையன் எழுதும்போது அதிகம் உபயோகிப்பது பேனாவா? பென்சிலா?"

"ரப்பர்!"

— குல்லு



**"அவங்களெல்லாம் சின்ன வயசிலே ஹாக்கி விளையாடினாங்க. நான் கிரிக்கெட் player".**

— குல்லு

**"ஊழல் வழக்கை ஒத்திவைக்க ஒரு அளவே இல்லாமல் போச்சு!"**

**"எப்படிச் சொல்றீங்க...?"**

**"2010-ஆம் ஆண்டு, ஜனவரி10-ஆம் தேதிக்கு ஒத்தி வைச்சிருக்காங்க!"**

**— தேனி எஸ். மாரியப்பன்**





• 'தமிழ்ப் பொண்ணு'

நாட்டில் அவ்வப்போது ஓவியக் கண்காட்சிகள் நடக்கின்றன. அமைதியான காலரியில் அங்கும் இங்குமாக ஒரு சிலர் சுவரில் மாட்டப்பட்டிருக்கும் படங்களை ஏகதேசம் ஆராய்ச்சி பாவத்துடன் ஐயோ பாவமாகப் பார்த்துக் கொண்டிருப்பார்கள்.

ஆனால் சமீபத்தில் சென்னையில் நடந்த சஜிதாவின் கண்காட்சிக்குச் சென்றவர்களுக்கு - அதன் டைட்டிலே ஒரு மாறுதலைக் கொடுத்தது. நிமிர்ந்து பார்க்கச் செய்தது! 'Beauty by mistake'!

கேரளத்துக்காரரான சஜிதா சென்னையில் நடத்திய இந்தக் கண்காட்சியில் இடம் பெற்ற அத்தனை படங்களும் 'பெண்'ணை மையப்படுத்தி வரையப்பட்டவை.

டைட்டிலோடு சம்பந்தப்படுத்திப் பாருங்கள்... பெண்மை, அழகு இவையெல்லாம் தவறுகளின் விளைவா? அதெப்படி?

"ஐயோ, எனக்கு சர்ச்சைகளில் விருப்பமில்லை!" என்று உடனே மறுத்து விடுகிறார் இந்த ஓவியப்பட்டதாரி. (கேரளாவில் படிப்பு - சோழ மண்டலம் ஓவிய கிராமத்தில் வாசம் - கணவரும் ஓர் ஓவியர்!)

பின்?

"ஒரு செக்கோஸ்லாவாக்கியா எழுத்தாளரின் நாவல் ஒன்று படிக்கக் கிடைத்தது எனக்கு. அதிலே 'சபீனா'

# ஒரு பெண் ஓவியரின் ஓவியப் பெண்கள்!

என்றொரு பெண் ஓவியர். அவள், தன் ஓவியக் கண்காட்சிக்கு என்ன பெயரிடலாம் என்று யோசிக்கும்போது 'தன்னிச்சையான அழகு' என்று அவளுக்கொரு டைட்டில் தோன்றுகிறது. அது பற்றி அவள் மேலும் யோசிக்க, 'தவறால் விளைந்த அழகு' என்ற கருத்து பிறக்கிறது. அதையே தன் கண்காட்சிக்கு டைட்டிலாக வைத்து



• சஜிதா



• ''பட்டப்பகலில் இருள்'

விடுகிறாள். அந்தத் தலைப்பு என்னைக் கவர்ந்ததால் என் கண்காட்சிக்கும் அதையே தலைப்பாக்கி, அதற்கேற்றவாறு நான் வரைந்த ஐம்பது ஓவியங்களை இங்கே வைத்திருக்கிறேன்'' என்றார்.

சஜிதா வெறும் ஓவியர் மட்டுமல்ல - ஆரம்ப காலத்தில் சிற்பக்கலையில் ஆர்வம் காட்டியிருக்கிறார். (''அது உடல் ரீதியில் எனக்கு சிரமமாக இருந்ததால் சுலபமான ஓவியத்துக்கு மாறிவிட்டேன்!'') கவிதை எழுதுகிற வழக்கம் வைத்திருக்கிறார். (''இப்போ அவ்வளவா எழுதறதில்லை!'') கணவரும் ஓவியராக இருப்பதால் முழு மூச்சாக ஓவியப் பணி!

இங்கே மட்டுமின்றி ஜெர்மனி, இங்கிலாந்து என்று கடல்கடந்தும் கண்காட்சி நடத்தியிருக்கிறார்.

அது சரி... இப்படிப் பெண்ணை மட்டும் மையப்படுத்து ஒரு கண்காட்சி நடத்தும் ஐடியா எப்படி வந்தது?

''நான் ஜெர்மனி சென்றிருந்தபோது ஒருவரிடம் பெருமையாக 'இந்தியாவிலேயே கல்வியறிவு பெற்றோர் அதிகம் உள்ள மாநிலம் எங்கள் கேரளாதான்' என்று சொன்னேன், ஒரு சந்தர்ப்பத்தில். ஊர் திரும்பியபோது, ஒரு சிறுமியைப் பலர் சேர்ந்து கற்பழித்த கொடுமை கேரளாவில் நடந்திருப்பதைக் கேள்விப்பட்டு அதிர்ந்து போனேன். 'கல்விக்கும் நடைமுறைக்கும் சம்பந்தமே இல்லையா?' என்று யோசிக்கத் தொடங்கினேன். விளைவு? 'பட்டப்பகலில் இருள்' என்ற இந்த ஓவியம்!'' என்று ஒரு கரித்துண்டால் வரையப்பட்ட பெண்ணின் ஓவியத்தைக் காட்டினார் நம்மிடம்.

ஓவியத்தைப் பார்த்தபோது எழுந்த உணர்வை விட அவர் வர்ணித்தபோது மிக நெகிழ்ச்சியாக இருந்தது.

இதே போல ஒவ்வொரு ஓவியத்துக்கும் வாழ்க்கை அனுபவங்களிலிருந்தே 'கரு' எடுத்திருக்கிறார் சஜிதா!

சஜிதாவின் எட்டு வயதுப் பெண் ஷில்பியும் ஓர் ஓவியர்!

''திருமணமான புதிதில் நான் புகுந்த வீட்டு மனிதர்களுடன் அதிகம் பழகாத காலத்தில் மிகவும் உணர்ச்சி வசப்பட்டவளாக இருப்பேன். எதற்கெடுத்தாலும் அழுது விடுவேன்! அதைப் பார்த்துக் கொண்டே இருந்ததாலோ என்னவோ, என் மகள் வரைகிற பெண் படங்கள் அத்தனையிலும் அந்தப் பெண் அழுவது போலவே வரைய ஆரம்பித்தாள். இப்போது என் அழுகை ஓய்ந்து விட்டதால், என் மகளின் படங்களிலும் அந்த அழுகைக் காட்சி மறைந்து விட்டது. மாறாக பட்டாம்பூச்சிகளும் பச்சை மரங்களுமாக வரைந்து தள்ளுகிறாள்!'' என்கிறார் சஜிதா.

இந்த வித்தியாசமான ஓவியர் ஒரு காதல் திருமணர்!

— எஸ். சந்திரமௌலி

அட்டை வண்ணப்படம் : யோகா

" 'தேர்தல்ல தோற்றதுக்கு தோழி காரணமில்லே, தொண்டர்களின் அலட்சியப் போக்கும் சிலரது துரோகமும்தான் காரணம்'னு முன்னே சொன்னாங்க. இப்ப, 'தொண்டர் தரிசனம்'ன்றாங்க" என்றான் சொக்கையா, ஆத்திரமாக.

அப்படீன்னு!"

"உளவுத் துறையும் ஏமாத்திட்டதாவே வைச்சுப்பம். பத்திரிகைங்க? பத்தி பத்தியா எழுதிட்டுத்தானே இருந்தாங்க?"

" 'பத்திரிகைகள் ஏதோ ஆத்திரத்துல அவதூறுகளை அடுக்கறதாக தப்பா எடை போட்டுட்டேன்; அதற்காக வருத்தப்படறேன்;



# தொண்டர் தரிசனம்

"கம்முனு வா" என்றான சூரப்பன்.

"கைநீட்டி துட்டு வாங் கினல்ல; பொறகு என்ன?"

"பிசாத்து ஆயிரம் ரூபா. நான் வாங்கிட்டு பஸ்ஸேறி வரதுக்கே காரணம், தலைவியை சந்திக்க நேருக்கு நேர் கேட்டுடணும்ங்கிறதுக்காகத் தான்!"

"அதான் விவரமா சொல்லிட்டாங்களே, பேப்பர்ல பார்க்கலை? 'நான் எந்த ஒரு குடும்பத்துக்காகவும் இல்லை; எந்த தனி மனிதருக்காகவும் இல்லை; கட்சிக்காகவும் தொண்டர்களுக்காகவும்தான் வாழ்ந்துக்கிட் டிருக்கேன்'னு அறிக்கை விட்டிருக்காங்களே!"

"ஆட்சியில இருந்தப்ப, நடந்த அக்கிரமங் களையெல்லாம் பார்த்துக்கிட்டுத்தானே இருந்தாங்க?"

"அதையும் விளக்கியிருக்காங்களே! 'சில தனி நபர்களும் சில நண்பர்களும் சில அமைச்சர்களும் தப்பா நடந்துக்கிட்டிருக் காங்க. ஆனா, அவங்களைப் பற்றிய உண்மை களை எனக்குத் தெரிவிக்காமல் வேண்டு மென்றே உளவுத் துறை மறைத்து விட்டது!

வேதனைப்படறேன்'னு ஒப்புக்கிட்டாங்களே! எவ்வளவு பெருந்தன்மை!"

"இதென்ன, யாரை ஏமாத்தப் பார்க் குறாங்க? முதல்வருக்கே தெரியாமல், அவருக்கு நெருங்கினவங்களும் அமைச்சர் களும் கூட்டுக் கொள்ளை அடிக்க முடியுமா? முடியும்னா இவங்க என்ன முதல்வர்? அந்தப் பதவியை வகிக்க இவங்களுக்கு என்ன தகுதி?"

"நீ ரொம்ப யோசிக்கிறே. தொண்டனுக்கு இது உதவாது" என்றான் சூரப்பன்.

"அப்ப இவங்க பணம் பண்ணவேயில் லியாமா? கேட்காம விடப் போறதில்லே!"

"வீண் வம்புல நீ மாட்டிக்காம இருக்கப் போறதில்லே!"

---

**ஜெயந்தி**

“என் நகத்தின் சதை போன்றவர்களே! என் உடலின் உயிர் போன்றவர்களே...”

தொண்டர் தரிசனம் தொடங்கியது.

“இன்று நாம் துரோகிகளையெல்லாம் வெளியேற்றி கட்சியைத் தூய்மைப்படுத்திக் கொண்டிருக்கிறோம். நடந்தன கனவாக மறையட்டும்; இனி நடப்பன நல்லனவாக இருக்கட்டும்!”

சொக்கையாவுக்கு ஆவேசமாக வந்தது. “ஒரு சந்தேகம்!” என்று குரல் கொடுத்தான்.

‘என்ன?’ என்பது போல் தலைவி ஆச்சர்யமாகத் திரும்பினார் அந்தப் பக்கமாக.

அதற்குள் தொண்டர்களிடையே தொண்டராகப் புகுந்திருந்த அடியாட்களுள் ஒருவன் சொக்கையாவை நெருங்க, அவன் முதுகில் கூர்மையாக ஏதோ உறுத்தியது. இலேசாக ஒரு எரிச்சல் கண்டது. “பேட்டா கீசுடுவேன், கசு! தலைவி பேச்சிலே உனக்கு சந்தேகமாடா! பேமானி!” என்று மிரட்டினான் மாரி.

“இன்றைய ஆட்சியை வீழ்த்தி விட்டு எங்கள் தலைவி மீண்டும் பதவிக்கு வருவது, ஐந்து வருஷங்களுக்கு அப்புறமா, அல்லது அதற்கு முன்னதாகவேயா?” என்றான் சொக்கையா.

தலைவி அவனைப் பார்த்துப் புன்னகைத்தாள். “ஐந்தாண்டுகளுக்குப் பின் நிச்சயம்; அதற்கு முன்னதாக சாத்தியம்; இன்றே உங்கள் நெஞ்சங்களை நான் ஆள்வது சத்தியம்!”

கரவொலி, விசில் சத்தம், ‘டால்பி ஸ்டீரியோ சவுண்ட் சிஸ்டம்’ இன்றியே காதைக் கிழித்தது!

“அந்த ஆளை அழைச்சு வா” என்று உத்தரவு போட்டுவிட்டு, பங்களாவுக்குள் மறைந்தார் தலைவி.

சற்று நேரத்தில் தலைவி முன்நின்றான். “சமயோசிதமா நடந்துக்கிட்டு பிரமாதப்படுத்திட்டே! வாங்கிக்க” என்று சோபா சுந்தரி ஜாடை காட்ட, கனமான கவர் தரப்பட்டது. “பத்தாயிரம் இருக்கு. ஸ்பெஷல் போனஸ்!”

ஏமாற்றமா, சந்தோஷமா என்று புரியாமல் பெற்றுக் கொண்டு திரும்பினான்.

“மாரி மாதிரி ஆளுங்க எங்கிட்ட சாரி சாரியா இருக்காங்க. எல்லார்கிட்டேயும் ஸ்பிரிங் கத்தியும் இருக்கு” என்று சொல்லி அனுப்பினாள்.

சொக்கையா அமைதி அடைந்தான். ‘தன்னைப் போல்தானே மற்றவர்களும்?’ என்று எண்ணி எல்லோரையும் மன்னித்து விட்டான். ஒருத்தியைத் தவிர!

# ரெய்டு பார்ட்டி

ஒரு பத்திரிகையாளனுக்கு நிறைய நண்பர்கள் இருக்க வேண்டும். முக்கியமாக பல்வேறு உளவுத் துறைகளில். அப்போதுதான், “நடந்தது இதுதான்; என் பேரைப் போட்டுடாதே” என்ற முன்னுரை, பின்னுரையுடன் நிறைய தகவல்கள் கிடைக்கும்!

எனவே, ரக்ஷானந்தா ஜுனீயின் நட்பை நான் வளர்த்துக் கொண்டேன். பெயர் கற்பனை என்று கூறத் தேவையில்லை. அவனுடன் பேசுவதற்காக கொஞ்சம் ஹிந்தி பழகிக் கொண்டேன். அவன் ஆங்கிலமும் ஹிந்தியும் கலந்தடிப்பான். கதை தமிழில் மட்டுமே தொடரும், ஒருசில வார்த்தைகள் தவிர. த.கு.ம. மன்னிப்பாராக!

“ஏம்பா, ரெய்டு போயிட்டு வெறுங்கையோடு திரும்பினதே கிடையாதா?” என்று ஒருநாள் தூண்டில் போட்டேன். ரஞ்சித் ஹோட்டலின் கூரைத் தோட்டத்தில் பஞ்சாபி நானை கிழித்து மென்று முழுங்கிக் கொண்டிருந்தான். தாடை வலிக்காதோ? தோசைக்கு ஈடாகுமோ!

“சில சமயம் ஏமாற்றத்தோடு திரும்பினதுண்டு. ஏதாவது துப்பு கிடைத்தால்தான் ரெய்டு பண்ணுவோம். ஆனா ரெய்டு வரப் போறாங்கன்னு அந்தாளுக்கும் துப்பு கிடைச்சுடும்! அவசர அவசரமா வேற இடத்துக்கு சூட்கேஸ்களைக் கொண்டு போய் பதுக்கிடுவான்; உளவு பார்க்கிறதுக்கு நாங்க இருக்கோம்னா, எங்களை உளவு பார்க்க தொழிலதிபருங்களும் அரசியல்வாதிங்களும் ஆட்களை வைச்சிருக்காங்க!”

“சில சமயம் நீங்களே கட்டுக்கட்டா நோட்டுங்களைக் கொண்டு போய் வைச்சுட்டு அரெஸ்ட் பண்ணுவீங்களாமே?”

“எமெர்ஜென்ஸி டயத்துல

நடந்திருக்கு. அதிகாரத்துல இருக்கிறவங்க, தங்களுக்குப் பிடிக்காதவங்களை சுலபமா உள்ளே தள்ள இந்த வழியைக் கையாண்டு பழிசுமத்தினதுண்டு. இன்னிக்கு சாத்தியமில்லே. ஒரு கெட்டிக்கார வக்கீல் ரெண்டு நிமிஷத்திலே எங்க கேஸை தவிடுபொடியாக்கிடுவான்.''

''எங்களைப் பொறுத்தமட்டில் மனுஷன் நாயைக் கடிச்சாத்தான் நியூஸ்'' என்றேன்.

''அப்படியும் நடந்திருக்கு. நான் இன்கம்டாக்ஸ்ல இருந்தப்ப ஒரு சமயம் ஒரு டாக்டர் வீட்டில் ரெய்ட் நடத்தினோம். ஆறு பெட் ரூம்; டபுள் ஃப்ளாட். ஒரு இழவும் அகப்படலை. அதிகபட்சம் ஐயாயிரமோ என்னமோதான் இருந்தது. நகைகளும் தோடு, மூக்குத்தி, வளையல், சங்கிலின்னு அளவாகத்தான் இருந்தது. யாரையும் உள்ளே வரவோ, வெளியே போகவோ அனுமதிக்காமல் குடையோ குடையோன்னு குடைஞ்சுக்கிட்டிருந்தோம். ஒரே வாசல்தான். அங்கே காவல் போட்டிருந்தோம்.

''அலுத்துப் போய் 'கிளம்பலாம்'னு முடிவு செய்த நேரத்தில், பாட்டி, அதாவது டாக்டருடைய மாமியார், ''ஐயய்யோ! என் தோடு! என் தோடு!''ன்னு அலறினாங்க. எங்களுக்கு ஒண்ணும் புரியலே.

''கெட்டிக்காரக் கிழவி ஒரே தாவாகத் தாவி வாசல் கதவை அடைச்சு நின்னுக்கிட்டா.

'' 'நான் செத்தாலும் சரி; தோடு கிடைக்கிற வரை இந்த இடத்தை விட்டு நகர மாட்டேன்'னுட்டா. ஒரு கிழவியை பலவந்தமா நகர்த்திவிட்டு வெளியேற முடியுமா? ரெய்டு நடத்த வந்த எங்க மீதே அவ குற்றம் சுமத்தறான்னு புரிஞ்சுது. நல்லா மடக்கிட்டா.''

''அப்புறம்?''

''அப்புறமென்ன; பத்துப் பதினைந்து நிமிஷம் பதட்ட நிலை. பிறகு அந்தப் பொல்லாத தோடு, ஜோடியாகக் கட்டிலுக்கடியில் கிடந்து கிடைச்சுது!''

''அதெப்படி?''

''புரியலையா? எங்களில் ஒருத்தன்தான், குடைந்து குடைந்து தேடும்போது, ஆசைப்பட்டு அதை லவுட்டியிருக்கணும். 'பாட்டிகிட்ட மாட்டிக்கிட்டோம்; இனி தப்ப முடியாது'ன்ற நிலைல லாகவமா கீழே போட்டு, யாரும் பார்க்காத சமயம் காலால கட்டிலுக்கடியில் உதைச்சுத் தள்ளியிருக்கணும். உளவுத் துறையிலே எல்லாருமே புத்தர்னு சொல்ல முடியாது.''

''அடப்பாவிங்களா!'' என்றேன்.

''ஆனாலும் எனக்கு ஒரு சந்தேகம்'' என்றான் ரக்ஷானந்தா.

''என்ன?''

''அந்தப் பாட்டி வேணும்னே தோட்டைக் கழற்றி காலுக்கடியில் தள்ளிட்டு எங்களைப்



பழிவாங்கிட்டான்னு! அந்தப் பதினைந்து நிமிஷம் நாங்க பட்ட மன அவஸ்தையை எந்த ரெய்டின்போதும் எந்த நிஜ குற்றவாளியும் அனுபவிச்சிருக்க மாட்டான்! யாரோ பொறாமை பிடிச்சவன் தந்த பொய்யான தகவலின் பேரில் தப்பான ரெய்டு நடத்தினதுக்கு பாட்டி எங்களை சரியானபடி தண்டிச்சுட்டா!''

ரக்ஷானந்தா என் செலவில் மூழுங்கிய ஐம்பது ரூபாய் டிபனுக்கு நல்ல குட்டிக் கதை கிடைச்சதா நான் நினைக்கிறேன். நீங்க?

? இந்திரா பார்த்தசாரதி



சிவப்பு ஸ்லீவ்லெஸ் நைட்டியின் மேல் பட்டன் அவிழ்ந்து கிடந்தது. தலைமுடி, தளர்ந்த முடிச்சாகக் கழுத்தருகே விளையாட, சுகன்யா பதறிக் கொண்டிருந்தாள்.

மஞ்சள் மினுக்கிய முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு, ஐந்து வயதுக் குழந்தையைப் போல் பொங்கி அழுதாள் அம்மா.

"என்னாச்சும்மா...? சொல்லுங்க..." - சுகன்யா கேட்கக் கேட்க, அம்மாவின் அழுகை அதிகமாகிக் கொண்டிருந்தது.

"அம்மா...!"

ஸ்ரீராமின் குரலைக் கேட்டதும் சற்று அடங்கினாள்.

"என்னம்மா இது...? அவ ரொம்ப பயப்படறா பாரு... என்னாச்சு...?"

"கழுத்துல திருமாங்கல்யத்தைக் காணுமேடா!"

அப்போதுதான் ஸ்ரீராம் கவனித்தான். முதல் நாள் கட்டிய மஞ்சள் கயிறும் பொன் சரடுமின்றி சுகன்யாவின் கழுத்து வெறுமையுடன் மினுமினுத்தது.

"ராத்திரி இரண்டு மணி இருக்கும்... தூக்கத்திலே ரொம்ப குத்திச்சும்மா... அதான் அவிழ்த்து, தலைகாணிக்கடியிலே வைச்சிருக்கேன். இதோ, இப்ப போய்க் குளிச்சுட்டு, டிரெஸ் பண்ணிக்கிட்டு எடுத்துப் போட்டுக்குவேன்..."

விருட்டென்று படுக்கையறை உள்ளே போன ஸ்ரீராம், கையில் மாங்கல்யத்துடன் திரும்பினான்.

சுகன்யாவின் கழுத்தில் அவற்றை மீண்டும் மாட்ட முயன்றவனை அவசரமாகத் தடுத்தாள் அம்மா.

"இருடா... கிழக்கைப் பார்த்து நின்று போடு..." அழுகை முழுவதுமாய் அடங்காத குரலில் சொன்னாள்.

"நான் வேணா நாதஸ்வர டேப் போடட்டுமா?"- குமாரின் வேளை தப்பிய நக்கல் எடுபடவில்லை.

"சுகி... இதை எப்பவும், எதுக்காகவும் கழட்டாதே... புரிஞ்சுதா?"

ஸ்ரீராமின் ஆணையிடுகிற தொனி சுகன்யாவுக்குப் புதிதாக இருந்தது. "இதை நீ முன்னாடியே சொல்லியிருக்கலாமே ஸ்ரீராம்!"- அவள் கேட்டபோது ஆதங்கத்துடன் கோபம் கூட குரலில் எட்டிப் பார்த்தது.

ஸ்ரீராம் இதற்குப் பதில் சொல்வதற்குள் அம்மா தலையிலடித்துக் கொண்டு அழ ஆரம்பித்தாள்.



"இப்படி மண்டையிலே அடிச்ச மாதிரி பேரைச் சொல்றாளேடா... அதுவும் நாலு பெரியவா முன்னாலே..."

"பேரைச் சொல்லக் கூடாதா...? அப்படின்னா நான் உன்னை எப்படிக் கூப்பிடறது?" – சுகன்யா ஏக வசனத்தில் ஸ்ரீராமைக் கேட்க, வீடே ஸ்தம்பித்தது.

அனாவசியமாய்த் தலையிட்டு விஷயத்தைக் கிளற வேண்டாமென்று பேப்பர் படிப்பதாகப் பாசாங்கு செய்த ராமநாதன், ராணுவ உத்தரவைக் கேட்டது போல் எழுந்தார்.

பூஜையறையைச் சுத்தம் செய்து கொண்டிருந்த வசந்தி, தூக்கிச் செருகிய புடவையுடன் உறைந்து போய் நின்றாள். சமையலறையில் காய்கறி நறுக்கிக் கொண்டிருந்த சித்தியும் அத்தையும் பார்வை பரிமாறிக் கொண்டனர்.

தாலியின் புனிதத்துவம் பற்றி மன்னிக்கு ஒரு மினி லெக்சர் கொடுக்கலாம் என்று உற்சாகமாய்த் தயாரான குமார், வாயடைத்துப் போனான்.

தான் செய்த தவறை உணர்வதற்கு சுகன்யாவுக்கு ஒரு முழு நிமிடம் ஆயிற்று.

"ஓ காட்! ஐ ஆம் சாரி... அம்மா, நிஜமாகவே ரொம்ப சாரி..." மிக இயல்பாக அவள் கை சரஸ்வதியை நோக்கி நீண்டது.

அவசரமாக இரண்டடிகள் பின்னுக்கு

எடுத்து வைத்தாள் அவள்.

"சுகன்யா, நீ முதல்ல போய்க் குளிச்சுடேன்.. ஸ்ரீராம் அவள் தோளைத் தொட்டு நிறுத்தி, திசை திருப்பி அனுப்பினான்.

சோப்புப் பெட்டியையும் துணிகளையும் அலமாரியில் வைத்த சுகன்யா, ஆர்வக் குறுகுறுப்புடன் அந்தக் குளியலறையை ஆராய்ந்தாள். மாற்றுத் துணிகளை மாட்ட ஸ்டாண்ட் கிடையாது. சிமெண்ட் தரை வழுக்காமல் மொறமொறப்பாக இருந்தது. குழாயின் அடியில் பக்கெட்டுக்கு பதிலாகப் பெரிய பித்தளைப் பாத்திரம் இருந்தது. அதன் அருகே இன்னொரு சிறிய பித்தளைப் பாத்திரம். ஓரத்தில் ஒரு மரப்பலகை சாய்த்து வைக்கப்பட்டிருந்தது. அதன் பக்கத்தில், தரையில் புதைத்த கருங்கல். அதன் மீது உருண்டு கிடந்த மஞ்சள் கிழங்குகள். மஞ்சள் உரைத்து உரைத்து நடுக் குழிந்து போய்க் கிடந்தது அந்தக் கல்.

'ஸ்ரீராமின் அம்மாவும் பாட்டியும் கொள்ளுப் பாட்டியும் கூட அந்தக் கல்லில் மஞ்சள் உரைத்துக் குளித்திருக்கக்கூடும். அவர்களுடைய திருமண வாழ்க்கை எப்படித் துவங்கியிருக்கும்...? நிச்சயமாகத் தன்னுடையதைப் போல் ஒரு சூறாவளியாகச் சுழன்று புறப்பட்டிருக்காது.'

'பதவிசாக, புதுப் பெண்களாக வளைய வந்திருப்பார்கள். மாமியாருக்கு முன்னதாக எழுந்து, குளித்து முழுகி, தமிழ் சினிமா மனைவிகள் போல் தலையைப் பின்னி, பூச்சூடி, கொஞ்சமாகப் புன்னகை பூத்திருப்பார்களோ..'

'தனக்கு மட்டும் ஏன் அந்தப் பதவிசு வரவில்லை..? அது ஓர் உயர்க்குணமாகத் தனக்குப் புகட்டப்படவில்லை என்பதை உணர்ந்தாள். இந்த வீட்டில் ஒருத்தியாக வேண்டுமானால் அதைப் பழகிக் கொள்ள வேண்டும். எப்போதும் உல்லாசமாய்ச் சிறகடிக்கும் மனசை இழுத்துப் பிடித்து, காதைத் திருகி அடக்க வேண்டும். இந்த வீட்டின் வழிக்குக் கொண்டு வர வேண்டும்.'

'கொஞ்சம் போலித்தனமாய் இருக்காதோ?... கொஞ்சம் என்ன..! நிரம்ப போலித்தனம்...!' – சுகன்யாவை அறிவு எச்சரித்தது. ஆனால் இத்தனை பேரின் அன்பை, ஆதரவைப் பெற அது சின்ன விலைதான்...! - சுவரில் சரித்து வைத்திருந்த பலகையைப் போட்டு அமர்ந்து கொண்டு மறுநாள் காலையைத் திட்டமிட ஆரம்பித்தாள் சுகன்யா. விடியும் முன்பு எழுந்து குளித்து ஸ்ரீராமுக்குக் காப்பி கொடுத்து எழுப்பி...

சற்று முன் ஸ்ரீராமை எழுப்பிய அவசரம் நினைவுக்கு வர, அவள் சிந்தனை முந்தைய இரவை நோக்கிப் போனது. அவன் மடியில் முகம் புதைத்து அப்படியே தூங்கிப் போனது என்ன நியாயம்? அவனுடைய எதிர்பார்ப்புகள் என்னவாய் இருந்திருக்கும்? அவன் இழுத்து உச்சிமுகர்ந்தபோது ஏற்பட்ட கிளர்ச்சியைக் கேலியால் மறைத்து, அவனைத் திகைப்பிலாழ்த்தி...

நட்பும் அலுவலகப் பணியாலும் கலந்து பின்னிய ஒரு மெல்லிய திரை இன்னமும் ஸ்ரீராமுக்கும் தனக்குமிடையே தொங்கிக் கொண்டிருப்பதை உணர்ந்தாள். அதை மூர்க்கமாய்க் கிழித்தெறியுமளவுக்கு அவன் கண்ணியக் குறைவானவன் அல்ல. ஆனால்... அவனுடைய பொறுமையை ரொம்பவும் சோதித்து விட்டோமோ...?

'உடனே போய் அவன் கழுத்தைக் கட்டிக் கொண்டு இந்தக் கேள்விகளால் திணறடித்தால் என்ன....?'

புன்னகையில் இதழ்க்கடை விரித்து கன்னங்களில் கூட செம்மை படர்ந்ததை உணர்ந்து தன்னையே வியந்துகொண்டாள் சுகன்யா.

குளியலறைக் கதவு தடதடவென்று தட்டப்படும் ஓசை அவள் மோனத்தைக் கலைத்தது.

"யாரு...?"

## ஜாலி போட்டி - 2

### முடிவு

1. குறைந்த வரி, குறைந்தகப்பம்
2. ரொம்பப் பிடிக்கும்
3. நல்வழியில் கொண்டு போகிறார்
4. மகிழ்ந்த மக்கள்
5. மந்திரியின் எதிர்ப்புத்தானே
6. எண்ணி மகிழ்ந்தார்
7. சந்தோஷப்பட்டார்
8. லஞ்சம் வாங்காத போதெல்லாம்
9. எண்ணிப் பார்த்துச் செய்யாதீர்கள்
10. வெட்கி மகிழ்ந்தார்

– அந்த அரசர் கதையில் நாம் செய்திருந்த இந்தப் பத்து தவறுகளைப் பல ஆயிரம் பேர்கள் சரியாகக் கண்டுபிடித்து எழுதி விட்டார்கள்.

ஆகவே குலுக்கலில் ரூ. 5000/- பரிசு பெறுகிறார், பா. ஜெயக்குமார், (42, புதுத் தெரு, வந்தவாசி - 604 408) கங்கிராட்ஸ்!

– ஆர்.

"நான்தான் வசந்தி... கதவைத் திறங்கோ..."

பாத்ரூமுக்குள் நுழைந்து தாளிட்டுக் கொண்டு ஐந்து நிமிடங்களாகி இருக்கும். இன்னமும் உடைகளைக் கூட கழற்றவில்லை. வசந்தி என்ன நினைத்துக் கொள்வாள்...?

கதவைத் திறந்தபோது வசந்தி எதுவும் கேட்கவில்லை.

"தலைக்கு ஸ்நானம் பண்ணச் சொன்னா அம்மா. இந்தாங்கோ... மஞ்சள் உரைக்கத் தெரியுமோ, தெரியாதோ... இதை கொடுக்கச் சொன்னா..."

ஒரு தாளில் சின்னக் குவியலாக மஞ்சள் தூள்! அதைக் கவனமாய் விரல் படாமல் சுகன்யாவிடம் கொடுத்துவிட்டுப் போய் விட்டாள்.

பாத்ரூம் கதவை மீண்டும் சாத்திக் கொண்டவளுக்கு மஞ்சள் தூளை என்ன செய்வதென்றே புரியவில்லை. ஒருகணம் யோசித்தாள். பிறகு குழாயைத் திறந்து பித்தளை அண்டாவில் நீர் நிரப்பி அதில் மஞ்சள் தூளைப் போட்டுக் கலக்கினாள். செம்பினால் மொண்டு மொண்டு உச்சந்தலையில் ஊற்றிக் குளித்தபோது பழைய உற்சாகம் பீறிட்டுத் திரும்ப, ஆனந்தமாகப் பாட ஆரம்பித்தாள்.

உடலைத் துடைத்துக் கொண்டு பவுடர் டின்னைக் குலுக்கியபோது பெரியத்தையின் குரல் தெளிவாகக் காதில் விழுந்தது.

"டேய் ஸ்ரீராமா! உன் ஆம்படையாகிட்டே சொல்லி வை... இந்த மாதிரி கையில்லாத கவுனையெல்லாம் போட்டுக்கிண்டு வளைய வரப்படாது! வசந்திக்கே உங்கம்மா மாக்ஸி வாங்கித் தர்றதில்லே... போற இடத்துல எப்படி இருக்குமோ... புடைவையைக் கட்டிண்டே தூங்கிப் பழகட்டும்ங்கறா... உன் பெண்டாட்டியென்னடான்னா கையில்லாத கவுனு, உள் பாவாடை வேற தெரியறது..."

"அத்தை, கொஞ்சம் நாளானா எல்லாம் பழகிக்குவா, நீங்கதான் ஒரு மாசம் இருந்து சுகன்யாவுக்கு எல்லாம் சொல்லிக் கொடுங்களேன்..."

"ஐயோ! எனக்கேண்டா வம்பு? உனக்காச்சு, உங்கம்மாக்காச்சு... உம் பொண்டாட்டிக்காச்சு... நாளைக்கே நான் கிளம்பிடுவேன்..."

"ஆமாமா! எல்லாரும் அவாவா ஆச்சா போச்சான்னு கிளம்பிப் போய்டுவேள். நான் முழுக்க நான்தான் அவதிப்படணும் அவளோட..." சரஸ்வதி சொன்னதைக் குளியலறையில் தெளிவாகக் கேட்ட சுகன்யாவுக்குச் சந்தேகம் வந்தது.

'தன் காதில் விழாது என்ற தைரியத்தில் பேசுகிறாரா? விழட்டுமே என்ற குரூரத்துடன் பேசுகிறாரா?...'

"ஏன்மா இப்படிச் சொல்றே? அவளும் மனுஷிதானே? அவ காதுல விழுந்தா எத்தனை வருத்தப்படுவா? எல்லாரும் கொஞ்சம் பொறுமையா இருந்தா, தானா எல்லாம் இசைஞ்சு வரும். அப்புறம் நீயே சுகன்யா மாதிரி இன்னொரு பொண்ணு இல்லைன்னுவே..."

தெளிவாகக் கேட்டுக் கொண்டிருந்த சுகன்யாவுக்கு இப்போது துக்கத்துடன் பெருமை சேர்ந்து தொண்டையை அடைத்தது.

"ஆமாண்டா... அவ..." என்று மீண்டும் மாமியார் ஆரம்பித்ததைக் கேட்க விரும்பாமல், காலி பித்தளை அண்டாவில் குழாயைப் பெரிதாகத் திறந்துவிட்டு தடதடவென்று தண்ணீரை நிரப்ப ஆரம்பித்தாள்.

வேண்டாம்! ஆதங்கத்தில் பேசப்படும் அவச்சொல்லைக் கேட்டு மனசைப் புண்படுத்திக் கொள்ள வேண்டாம். என் காதலைப் போல் அவர்களின் ஆதங்கமும் மெய்யானது தானே...? ஸ்ரீராமை எனக்கு முன் அவர்கள் அறிவார்கள். அவனுக்கும் சேர்த்துக் கனவுகளைச் சுமந்தார்கள். அந்தக் கனவுகளில் என்னைப் போன்ற ஒருத்திக்கு இடமிருந்ததேயில்லை... ஸ்ரீராம் என் கனவின் மெய்ப்பாடு என்றால், நான் அவர்களுடைய கனவின் தோல்வி! அந்த வருத்தம் வடுவாக மாறாமல் காப்பாற்றியாக வேண்டும்.

வெறித்தனமான உறுதியுடன் மீண்டும் தண்ணீரை மொண்டு மொண்டு தலையில் ஊற்றிக் கொண்டாள் சுகன்யா.

புதிதாகப் போட்டுக் கொண்ட வாசனைப் பவுடர் கரைந்து ஓடியது.

(தொடரும்)

## தங்க நகைப் பரிசு!

இன்னும் 21 வாரங்கள் வெளிவரப் போகிற இந்தத் தொடர்கதை, வாரா வாரம் ஓர் எழுத்தாளரின் பெயரில் வெளியாகும். ஆனால் முழுக்கதையையும் எழுதுபவர் ஒரே எழுத்தாளர்தான்! யார் அவர்?

வாரா வாரம் படித்து, யூகித்துக் கொண்டே இருங்கள். கடைசி வார அத்தியாயத்துடன் வெளியாகப் போகிற கூப்பனில், 'தொடரை எழுதியவர் யார்?' என்கிற உங்கள் யூகத்தை எழுதி அனுப்புங்கள்.

உங்கள் யூகம் சரியானதாக இருந்தால் உங்களுக்குத்தான் மின்னும் தங்க நகைப் பரிசு!

பலர் சரியான விடை எழுதியிருந்தால் குலுக்கல் முறையில் ஓர் அதிர்ஷ்டசாலி தேர்ந்தெடுக்கப்படுவார். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

● நாராயண பாலகிருஷ்ணன்,
கும்பகோணம். ❐

? கும்பகோணம் சாரங்கபாணி கோயிலில் ஜெ. ஆட்சியில் திருடு போன நகைகள் மீட்கப்படுமா?

! ஒன்னா, இரண்டா? எத்தனை கோயில் திருட்டுகள்! சிலைகள், நகைகளெல்லாம் இந்நேரம் உருக்கப்பட்டிருக்கும் அல்லது 'அரும் பொருள்' சேகரிப்பவர்களால் வாங்கப்பட்டிருக்கும். இப்படிப்பட்ட திருட்டுகள் ஒருபக்கமென்றால், மூன்று வருட குத்தகைக்கு எடுத்த கோயில் கட்டடத்தை இடித்து, பல மாடிக் கட்டடம் கட்டும் அக்கிரமம் போன்ற பகல் கொள்ளைகள் வேறு நடந்துள்ளன... வேதனை!

● மணிப்புறா, திருச்சி – 8.

? ரோஜா, ரம்பா, நக்மா, மனிஷா இவர்களில் யாருக்கு நீச்சல் உடை மிகவும் அழகாக இருக்கும்...?

! ஆக மொத்தம், நீச்சல் உடையின் அழகைத்தான் பார்க்கிறீர்கள்... இவர்கள் அழகை அல்ல...! அப்படித்தானே?

● ஷோபனாதாசன், நாட்டரசன்கோட்டை.

? தி.மு.க. அரசு, லஞ்சத்துக்கு எதிரான போர் நடத்தவில்லை. அ.தி.மு.க.வுக்கு எதிரான போர்தான் நடத்துகிறது... என்று பி.ஜே.பி. செயலர் இல. கணேசன் சொல்லியிருக்கிறாரே...?

! அ.தி.மு.கவுக்கு எதிரான போருக்கும் லஞ்ச ஊழலுக்கு எதிரான போருக்கும் இடையே பெரிய வித்தியாசம்... ஒன்றுமில்லையே...?

● என். ராஜி, மேலப்பாதி.

? காம்ப்ளியை மீண்டும் அணியில் சேர்த்திருப்பது பலமா? பலவீனமா?

! நடந்தவற்றுக்கு வருத்தம் தெரிவித்து, இனி நடக்கப்போவது நல்லதாயிருக்கும் என்ற நம்பிக்கையோடு வருகிறார்... வாழ்த்துங்களேன்!

● எம். கதீஜா ஹனீபா, திருச்சி – 6.

? ஜெயலலிதா, நரசிம்மராவ் – இவர்களுக்கு எதிர்காலம் உண்டா...?

! உண்டு – கம்பிகளுக்குப் பின்னாலா, முன்னாலா என்பதுதான் கேள்வி.

● என். சங்கர்தாஸ், ஸ்ரீவில்லிபுத்தூர்.

? எங்களூர் என்றால் தங்களுக்கு ஞாபகம் வருவது கோபுரமா? ஆண்டாள் கோவிலா? பால்கோவாவா...?

! இவை மட்டும்தானா...! தாமரைக்கனியை விட்டுவிட்டீர்களே!

● சிவராம சுப்பிரமணியன், தூத்துக்குடி.

? பிரதமரின் ஹிந்தி உரை எப்படி.....?

! ஹிந்திக்காரர்களின் இங்கிலீஷ் போல!

● இர. ரூபன், கோபாலசமுத்திரம்.

? தேர்தல் வாக்குறுதிகளை மூன்று ஆண்டுக்குள் நிறைவேற்றுவோம் என ப. சிதம்பரம் கூறியுள்ளாரே...?







* அழகை அல்ல!

! அட! மூன்று ஆண்டுகள் நிலைத்து, மூன்று பட்ஜெட் கொடுப்போம் என்ற நம்பிக்கை அவருக்கு இருக்கிறதா...? ஆச்சரியம்தான்!

● காட்டாலூர் இலக்கியன், சென்னை - 52.

? தமிழ்நாட்டில் சொத்துக்களை வாங்கியதற்கு கேரளாவில் பத்திரப் பதிவு செய்து, தமிழக அரசுக்குச் சுமார் எழுபது கோடி ரூபாய் இழப்பு ஏற்படுத்திய ஜெயலலிதா பற்றி...?

! சொந்தத்துக்கு ஆயிரம் கோடி, ஊழலில் சம்பாதிக்கும்போது, தமிழகத்துக்குச் சில கோடி நஷ்டமாவதைப் பற்றி கொஞ்சமாவது கவலைப்படுவார்களா என்ன...!

● எம். இராஜேந்திரன், இலால்குடி.

? 'என்னைக் கைது செய்ய பத்து நாட்களுக்கு முன் நோட்டீஸ் அனுப்ப வேண்டும் என்று ஜெ. கூறுகின்றாரே?

! சுதந்திர தின ஜோக் என்று

## மீண்டும் காம்ப்ளி: பலமா? பலவீனமா?

எடுத்துக் கொண்டு சும்மா விடுவீர்களா...!

● எச். முருகேசன், கொட்டாகுளம்.

? 'தவறான உத்தரவை அரசு பிறப்பித்தது என்ற ஒரே காரணத்தினால் அமைச்சரையும் முதல்வரையும் குற்றவாளியாகக் கருதுவது அதிர்ச்சிக்குரியது...' என்று ராஜ்ய சபா எம்.பி. ஒருவர் பேசியிருக்கிறாரே?

! தவறான உத்தரவு என்பது வேறு... பணம் பண்ணும் உள்நோக்கில் தவறான உத்தரவு பிறப்பிக்கப்படுவதென்பது வேறு. முன்னதை மன்னிக்கலாம். பின்னது தண்டிக்கப்பட வேண்டும்.

● வி. எஸ். இராமு, செம்பட்டி.

? கு. ப. கிருஷ்ணன் மாயமாய் மறைந்து போய் விட்டாரே...?

! கு ஃபார் குள்ளநரி; ப ஃபார் பதுங்கல்; கி ஃபார் கில்லாடி... என்று இருக்கலாம்! ஆனால் தமிழக உளவுத்துறை விரல் சப்பும் பாப்பா அல்ல; எனக்கு நம்பிக்கை இருக்கிறது.

● பாலாஜி, குடந்தை - 1.

? சி.பி.ஐ. இயக்குனருக்கு உச்சநீதி மன்றம் கண்டனம் தெரிவித்துள்ளது குறித்து...?

! நரசிம்மராவுக்குத் தண்டம் சமர்ப்பித்து, அவருடன் காரில் பயணித்து, அறிவுரைகள் கேட்டுப் பெற்றவருக்கு இந்தக் கண்டனம் தேவைதான். இனியாவது முதுகெலும்பு நிமிர்ந்தால் சரி.

● வெ. நீலா, மன்னார்குடி.

? வைரமுத்து, வாலி பாடல்கள் ஆபாசம் நிறைந்தனவாக இருக்கின்றனவே...?

! அவர்களே நல்ல நூல்களும் எழுதியிருக்கிறார்கள். அவற்றை மட்டும் வாங்கிப் படித்து சந்தோஷப்படுங்களேன்!



• எதிர்காலம்...



• எப்படி...?



• நல்லதும்...



• ...உண்டு!



• வருத்தத்துடன் வருகிறார்



• நிறைந்த நம்பிக்கை!



• தப்ப முடியாது!

● இ. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.

? 'புரட்சித் தலைவியைக் கைது செய்ய நினைத்தால், ஒரு லட்சம் தொண்டர்கள் பிணத்தின் மீது நடந்து சென்றுதான் கைது செய்ய முடியும்...' என்று காளிமுத்து கூறியுள்ளாரே?

! இவர் இப்படிக் கூற, 'ஜெ'வோ, 'என்னைக் கைது செய்தால் அமைதி காக்க வேண்டும்' என்று தொண்டர்களுக்கு அறிவுரை வழங்குகிறார். குழந்தையைக் கிள்ளி, தொட்டிலையும் ஆட்டி, டபுள் கேம் நாடகம் போடறாங்க!

● ஏ. செந்தில், போத்தனூர்.

? 'செல்வகணபதியை வீரப்பனோடு ஒப்பிட்டு (சந்தன) வீரப்பனைக் கேவலப் படுத்தாதீர்கள்...' என்று சட்டசபையில் த.மா.கா. உறுப்பினர் கூறியுள்ளது பற்றி?

! ஒரு வகையிலே நியாயமான பேச்சு. வீரப்பன் பசுத்தோல் போர்த்திய புலியாக உலவி, நல்லவனாக வேஷம் போட்டு, மக்களை ஏமாற்றவில்லை...

☐ ரூ. 25 பரிசு பெறுபவர்:
நாராயணா பாலகிருஷ்ணன்,
279, பெரியகடைத் தெரு,
கும்பகோணம் - 612 001.

# "விற்பனை அதிகாரி ஒருவரின் விடாப்பிடியான கோரிக்கை என்னை ராம் காஷ்யப் நிறுவனத்தில் டெபாஸிட் செய்யத் தூண்டியது"



சி.பலராமன்
ஓய்வுபெற்ற அக்கௌண்ட்ஸ் சூப்பர்வைஸர்
தமிழ்நாடு மின்சார வாரியம்
நம்பர் 5, E.B. ரோடு, திருச்சி 620 002.

# SUFFICIENT SAFETY + BBB +

"அவநம்பிக்கையின் பேரில் முதலில் நான் ராம் காஷ்யப் அதிகாரியைத் திருப்பி அனுப்பினேன். ஆனால் அவரோ விடாப்பிடியாக நிர்வாகத்தினரின் சிறப்பான பின்னணி, பங்கு வெளியீட்டில் வீடியோகான் நிறுவனத்தின் ஆதரவு என்று ஆதாரபூர்வமாக தொடர்ந்து வாதித்தார். நம்பிக்கை உறுதிப்படவே நானும் என் குடும்பத்தினரும் ராம் காஷ்யப் டெபாஸிட்டர்கள் ஆனோம். பின் தேதியிட்ட வட்டி வாரண்டுகளையும் ஒரு சில நாட்களிலேயே தந்து விட்டனர்."

சாமர்த்தியமான முறையில் செய்யும் முதலீடு, கடன் வசூலில் தனித்திறமை, நேர்மை, நாணயம், தொலைநோக்கு, செயல்திறன் இவையாவும் ராம்காஷ்யப்பின் அடிப்படை பண்புகள் ஆகும்.

அது மட்டுமின்றி, உரிய நேரத்தில் வட்டி வழங்குவதிலும், அசலைத் திருப்பியளிப்பதிலும் சிறந்து விளங்குவதால், **CARE** நிறுவனத்தாரினால் (ரிசர்வ் வங்கியின் வரைமுறைக்குட்பட்டது) **BBB +** மதிப்பீட்டிற்கு உயர்த்தப்பட்டுள்ளது. இதுவே உங்களது பணத்திற்கு ஒப்பற்ற பாதுகாப்பளிக்கிறது.






**Ram Kaashyap Investment Ltd**

**பதிவு அலுவலகம் :** 53 பிஷப் கார்டன், சென்னை 600 028.
போன் : 4936931, 4936932. ஃபேக்ஸ் : 91-44-4933319

**நிர்வாக அலுவலகம் :** 14 அன்னா அவென்யூ, பக்தவத்சலம் நகர், அடையாறு, சென்னை 600 020. போன் : 415002, 4916958, 410336

**கிளைகள் :** • **சென்னை**, போன் : 4970203, 4970204, 4998325 • **கோயம்புத்தூர்**, போன் : 231886 • **திருச்சி**, போன் : 704752 • **தஞ்சாவூர்**, போன் : 25871 • **மதுரை**, போன் : 541802 • **கும்பகோணம்**, போன் : 24221 • **ஈரோடு**, போன் : 79822 • **வேலூர்**, போன் : 26336 • **பாண்டிச்சேரி**, போன் : 46154 • **சேலம்**, போன் : 445771 • **திண்டுக்கல்** • **காரைக்குடி** • **திருநெல்வேலி**

**மற்றைய கிளைகள் :** • **ஆந்திர பிரதேசம்** • **கொச்சி** • **பெங்களூர்** • **மும்பாய்** • **புனே** • **புது டெல்லி.**

## உலகக் கண்ணோட்டம்; தனி மனித மேம்பாடு

சட்டபூர்வமான ஃபிக்ஸட் டெபாஸிட் விளம்பரம் 7.6.96 தேதியிட்ட 'ட்ரினிட்டி மிரர்' மற்றும் 10.6.96 தேதியிட்ட 'மக்கள் குரல்' நாளிதழ்களில் வெளியிடப்பட்டுள்ளது.

Insight-343

# ஹலோ, சுகமா?



**பா**ருங்க, டீவியில பருக்களைப் போக்கற கிரீம், எண்ணெய் வடிதலைத் தடுக்கற சோப் பத்தி விளம்பரம் வராத நாளே கிடையாது. 'மூஞ்சியைப் பாரு! யாராவது பார்த்துக்கிட்டே இருக்கணும்னு சொல்வாங்களா?' அப்படீன்னு ஒரு பொண்ணு எண்ணெய் மூஞ்சியோட கண்ணாடி முன்னால நின்னு புலம்பறதை தினமும் விளம்பரங்கள்ல பார்க்கறோம்.

என்ன பண்ணலாம் இதுக்கு?

அழகுக்காக மட்டுமில்லை. நம்ம ஆரோக்கியம் சம்பந்தப்பட்ட விஷயமும் இதுல அடங்கி இருக்கு!

ஓகே! 'பரு' அப்படீங்கறது என்ன? எண்ணெய் ஏன் வடியுது? ரெண்டுக்கும் கிட்டத்தட்ட ஒரே 'ரீஸன்'தான்.

'பருவத்துல வருவது பரு'ன்னு யாராவது சொன்னா கண்டுக்காதீங்க.

உணவு முறைதான் உண்மையான காரணம். 'பரு' அப்படீங்கறது நம்ம உடல்ல இருக்கற எக்ஸ்ட்ரா கொழுப்பு சத்தோட - எண்ணெய்ச் சத்தோட வெளிப்பாடுதான்! அங்கங்க கட்டி கட்டியா அது வீடு கட்டிடுது! போதாதகுறைக்கு, வியர்க்கும் போது எண்ணெயோடு அது சேர்ந்து வழிஞ்சி, பார்க்க சகிக்காம பண்ணிடுது.

நாம என்ன பண்றோம்? அடிக்கடி சோப் போட்டு மூஞ்சி அலம்பறோம். அப்புறம், ஆறு வாரத்துல, எட்டு வாரத்துல நிவாரணம்னு சொல்லிட்டு அழகழகா விக்கற க்ரீம்களை வாங்கி தடவிட்டு நிக்கறோம்! அஃப்கோர்ஸ் அவற்றினாலே பலனே இல்லைன்னு சொல்ல முடியாது தான். ஆனா, எல்லாம் தற்காலிகம்!

இப்படி செஞ்சுப் பாருங்க, ஒரு ஆறு மாசத்துக்கு. பரு - எண்ணெய் வடியற பிஸினஸே தலைகாட்டாது. திருப்தி ஆச்சன்னா கன்டின்யூ பண்ணுங்க. அதனால வேற சில பலன்களும் உண்டு. அதை கடைசியில சொல்றேன்.

எண்ணெய்ப் பலகாரங்களைத் தொடவே தொடாதீங்க. பொழுதுபோற

வெங்காயம் ரொம்ப பவர்ஃபுல் வஸ்துங்க! சரியான கிருமிநாசினி அது! ரத்த சுத்திக்கு அதைவிட பெஸ்ட் மெடிஸன் வேற கிடையாது!

இதையெல்லாம் ஸ்டிரிக்டா கடைபிடிச்சீங்கன்னு வெச்சிக்கங்க. உடம்புல இருக்கற கொழுப்புச் சத்து குறைஞ்சிடும். ரத்தம் ஃப்ரெஷ்ஷா ஓட ஆரம்பிக்கும். எண்ணெய் வடியறது, பரு தொல்லையெல்லாம் மறைஞ்சிடறதோட இன்னொரு அட்வான்டேஜ் - நீங்க ஸ்லிம்மா, அழகா பக்கத்துல இருக்கற ஷில்பா ஷிரோத்கர் மாதிரி ஆயிடுவீங்க. அப்புறம் உங்க முகத்தைப் பார்த்துக்கிட்டே இருக்கலாம்!

இதெல்லாம் சரி, இருக்கற பருக்களைப் போக்க என்ன வழின்னு கேட்டீங்கன்னா... சொல்றேன். ஆனா இது லாங்டெர்ம் ப்ராஸஸ். பட், உபயோகமானது!

வீட்டுல மரம், செடி வளர்க்கற பழக்கம் உண்டா? அல்லது வீட்டுப் பக்கத்துல புல் இருக்குதா? நைட்டு பனி பெய்து சில்லுனு

# பனித்துளியுடன் பசு மஞ்சள்

துக்காக 'கொறிக்கற' பிஸினஸை அடியோட விட்டுடுங்க. நம்ம நாட்டுல ஒரு சொலவடை சொல்வாங்க. நாக்குக்குப் பிடிக்கறதெல்லாம் உடம்புக்குப் பிடிக்காதுன்னு. அதை ஞாபகம் வெச்சிக்குங்க. முறுக்கு, சீடை, பஜ்ஜி, மசால் வடை... எல்லாத்துக்கும் ஸ்டிரிக்டா நோ சொல்லிடுங்க. அப்படியே ஐஸ்கிரீம், ஸாஃப்ட் டிரிங்ஸ் இதையெல்லாமும் கூடியமட்டும் கட் பண்ணிடுங்க. இதுக்கே பெரிய ரிலீஃப் வந்துடும்.

அடுத்த கட்டமா சாதத்தைக் குறைச்சி, கோதுமை சார்ந்த உணவுப் பொருள்களை கொஞ்சம் கொஞ்சமா எடுத்துக்கங்க. கூடவே நிறைய காய்கறிகள் சேர்க்கணும். அதுக்குன்னு உருளைக் கிழங்கு, வாழைக் காய்; கத்தரிக்காய்னு எண்ணெய்ல முக்கி, வேகவெச்சி இறக்கினீங்கன்னா காலி! கீரை, கேரட், காலிஃப்ளவர், முட்டைகோஸ், தக்காளி இந்த மாதிரி இருக்கறது பெட்டர்.

இருக்கும். காலைல எழுந்தவுடனே ஒரு மெல்லீசு துண்டு இல்ல கர்ச்சீப் எடுத்துட்டுப் போய் அந்தப் பனி நீரைத் தடவி எடுத்துட்டு வந்து முகத்துல ஒத்தடம் குடுங்க. செடி, கொடி இல்லாட்டி பரவாயில்லை. மொட்டை மாடியில ஒரு துண்டை நைட்டு விரிச்சி வெச்சிட்டு, காலைல எடுத்து முகத்தை அழுத்தித் துடைச்சிடுங்க.

அன்னைக்கு முழுக்க எண்ணெய் வடியாது! ரெகுலரா பண்ணிப் பாருங்க... பரு வர்றது குறைஞ்சுடும்!

மஞ்சள் நிறைய யூஸ் பண்ணுங்க. அது பெஸ்ட் மெடிஸன்! நம்ம நாட்டுல ஆண்கள் மஞ்சள் பூசறது இல்லை. ஆனா பூசினா தப்பில்லைங்கறது என் அபிப்பிராயம். லீவ் நாட்கள்ல லேசா முகத்துல மஞ்சள் தடவிட்டு ஒரு அரை மணில சீயக்காய் தேச்சி குளிச்சிடலாம். அசிங்கமாவெல்லாம் இருக்காது! (அப்புறம் மீசை முளைக்காதுன்னு கதை விடுவாங்க. நம்பாதீங்க.)

- சுமி

# திடுக்கிடும் கேள்விகள்

மதன்

டி.வி.வெங்கட்ராமன் வீட்டுக்கு விசிட் அடித்த குண்டர் கும்பல் 'டாக்குமெண்ட்ஸ் எங்கே?' என்று ஒரு கேள்வி கேட்டு நம் சிந்தனையைக் கிளறி விட்டார்கள். வி.ஐ.பி.க்கள் வீட்டுக்கு வருகிற குண்டர்களெல்லாம் இப்படியொரு திடுக்கிடும் கேள்வியைக் கேட்பது மரபாகி விட்டால் என்ன ஆகும்?

ஒரு கற்பனை!

ஜெ.ஜெ. டிவி.
பாஸ்கரன் வீட்டில்...

அந்த ஃபாரின் கார் எங்கே?

வீரமணி
வீட்டில்...

எங்கே ஜெயலலிதா குடுத்த அவார்டு - மெடல்?

தேவகௌடா
வீட்டில்...

உங்க சுதந்தரா தின பேச்சைக் கேட்டோம். எங்க உங்க இந்தி வாத்தியார்?

அசாருதீன் வீட்டில்...
எங்கய்யா அந்த சங்கீதா பிஜ்லானி? போட்டோவில்தான் பார்த்திருக்கேன். நேர்ல காட்டு. பார்க்கணும்!
சி.பி.ஐ. ஜோகிந்தர் சிங் வீட்டில்...
எல்லாம் சரி... அந்த 'ஜெயின் டைரி'யை எங்க ஒளிச்சி வெச்சிருக்கே? மரியாதையா குடுத்துடு! ஒருதடவை பார்த்துட்டுத் திருப்பிக் குடுத்துடறேன்!
தேவாரம் வீட்டில்...
வீரப்பன் இண்டர்வியு வீடியோ காஸெட் இருக்கா...? வந்தப்போ பார்க்க முடியாம போயிடுச்சு....
-ஜக்கு



# பேச்சுவார்த்தை

**சீதா ரவி**

**ரா**மகிருஷ்ணன் பத்திரிகையைக் கண்ணுக்கு மிக அருகே வைத்துப் படித்தார்: 'மணமகன் : சுகுமாரன். மணமகள் : மஞ்சுள பாஷிணி.'

வாழ்க்கையின் முரண்பாடுகளுக்கு முடிவேயில்லை! துரைராஜனின் மருமகளுக்குப் பெயர் மஞ்சுள பாஷிணி! பெயருக்கு ஏற்ப இனிமையாய்ப் பேசுவாளா...? இல்லை அவளும் தணலாய் வார்த்தைகளைக் கொட்டுவாளா?

கொட்டிய வார்த்தைகளை துரைராஜனால் அள்ளவும் முடியவில்லை; ராமகிருஷ்ணனால் மறக்கவும் முடியவில்லை! இத்தனைக்கும் விஷயமொன்றும் சொந்தப் பிரச்னை கிடையாது.

"சுபமங்களா அபார்ட்மெண்ட்ஸின் வாசலில் இருக்கும் பெரிய குப்பைத் தொட்டி நிரம்பி வழிகிறது. வீதியின் அசோசியேஷன் போதுமான அக்கறை காட்டவில்லை; ஆகவே அபார்ட்மெண்ட்காரர்கள் தனியொரு அமைப்புத் தொடங்கியாக வேண்டும்'' இது துரைராஜனின் யோசனை.

முதல் ஆட்சேபணை ராமகிருஷ்ணனிடமிருந்து தான் முளைத்தது: "ஊரோட ஒத்துப் போகணும்; பிரியக் கூடாது..."

அபார்ட்மென்டின் முப்பத்தேழு குடித்தனங்கள் இசகு பிசகாய்ப் பிரிந்து இரு கிழவர்களின் பின் அணிவகுத்துக் கொண்டன. 'உனக்காச்சு எனக்காச்சு' என்று வார்த்தைகள் தடித்து, ஆறு மாதங்களாய், கிரவுண்ட் ஃப்ளோரின் எதிரெதிர் வீட்டுக் கிழவர்களிடையே பேச்சுவார்த்தை கிடையாது!

துரைராஜன், ராமகிருஷ்ணனுக்குத் தபாலில் கல்யாணப் பத்திரிகை அனுப்பியிருக்கிறார்!

'அவமானப்படுத்துகிறானா? மறைமுகமாய் நட்புக்கு மீண்டும் அழைப்பு விடுக்கிறானா?' சந்தேகப்பட்டார் ராமகிருஷ்ணன்.

அழைப்பெனில் அதை ஏற்காவிட்டால் நஷ்டம் அவருக்குத்தான். அரைக் கண் பார்வையே மிச்சமிருக்கும் ஒண்டிக்கட்டை. ஆஸ்திக சமாஜ கச்சேரிக்கும் பஜனைக்கும் துரைராஜன் தவிர யார் உடன் வருவார்கள்? தெருவில் அவரைத் தவிர ஒரு ஆத்மாவை ம. வி. முன்னாவிருந்து இளப்ப முடியாது. ஆறு மாசமாய் சங்கீதம் கேட்காமல் செவிகள் அழுதன... ஆனாலும் ராமகிருஷ்ணன் எதிர் வீட்டுக் கல்யாணத்துக்குப் போகவில்லை.

"**எ**திர்வூட்டு மருமவப் பொண்ணு 'வீணை' எடுத்தாந்துகீது..." முகூர்த்தம் ஆன இரண்டாம் நாள் வேலைக்காரி சுப்பம்மா ஒலிபரப்பினாள்.

"ம்..."

ஏழு மணியிருக்கும். திருநீறு பூசி விளக்கேற்றுகையில் எதிர் ஃப்ளாட்டிலிருந்து அருட்பா கணீரென்று ஒலித்தது.

''ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற உத்தமர்தம் உறவு வேண்டும்...''

தமிழும் இசையும் ஒருசேர காந்தமாகி ராமகிருஷ்ணனைக் கதவருகே இழுத்தன.

வாசலைத் திறந்தபோது, எதிர்க் குடித்தனத்துக் கதவருகே துரைராஜனும் திருநீறு துலங்க நின்றார். அவர் பின்னால் மஞ்சுளபாஷிணி தம்புரா மீட்டிப் பாடுவது தெளிவில்லாமல் தெரிந்தது.

''உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார்... உறவு கலவாமை வேண்டும்.''

இரு ஜோடி கிழக் கண்கள் ஒரு கணம் சந்தித்து மீண்டன.

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன். ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர்.: 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

